ஸ்ரீமாந

வ. உ. சிதம்பரம்பிள்ளையவர்கள்

முதல்மனைவி

# வள்ளியம்மை சரித்திரம்.





இதன் மூலம்.

திருநெல்வேலி ஜில்லா எட்டயபுரம் சமஸ்தானம்
கீழ்முடிமன் வித்வான் ம-௱-௱-ஸ்ரீ சி. முத்துசுவாமிப்
பிள்ளையவர்களால் இயற்றப்பெற்றது.

அரும்பதவுரை.

ஸ்ரீமாந் வ. உ. சிதம்பரம்பிள்ளையவர்களால்
எழுதப்பெற்றது.





இந்தியா பிரின்டிங் வொர்க்ஸ், சென்னை.

1915.

# விளம்பரம்.

இதன் அடியிற்குறித்த நூல்கள் சென்னை, தம்பு செட்டிதெரு, ரிப்பன் புத்தகசாலையிலும், எஸ்பிளனேட், வி. கலியாணராமய்யர் புத்தகசாலையிலும், மயிலாப்பூர், ஜெனரல்சப்ளைஸ் கம்பெனியிலும், என்னிடத்திலும் கிடைக்கும்:—

| நூல். | | ரூ. அ. பை. |
|---|---|---|
| மனம்போலவாழ்வு—(2-ம் பதிப்பு அச்சில்) | ... | 0—8—0 |
| அகமேபுறம் ... | ... | 0—8—0 |
| மெய்யறம்—அரும்பதவுரையுடன் | ... | 0—8—0 |
| எனது பாடற்றிரட்டு—அரும்பதவுரையுடன் | | 0—8—0 |
| மெய்யறிவு—மூலமும் உரையும் | ... | 0—8—0 |
| எனது முதல் மனைவி வள்ளியம்மை சரித்திரம் | ... | 0—8—0 |
| தொல்காப்பியம்—மூலமும் உரையும் (அச்சில்) | ... | 4—0—0 |
| திருவள்ளுவர் திருக்குறள்—மூலமும் உரையும் (அச்சில்) | ... | 2—0—0 |

குறிப்பு:—மனம் போல வாழ்வு, அகமேபுறம், மெய்யறம், பாடற்றிரட்டு, மெய்யறிவு இவையும், தொல்காப்பியம், திருக்குறள் இவற்றின் உரைகளும் என்னால் இயற்றப்பெற்றவை. வள்ளியம்மை சரித்திரம் திருநெல்வேலி ஜில்லா எட்டயபுரம் சமஸ்தானம் கீழமுடிமன் வித்வான் ம-ள-ள-ஸ்ரீ. சி. முத்துசுவாமிப் பிள்ளையவர்களால் இயற்றப்பெற்றது.

மயிலாப்பூர், சென்னை,
இராக்ஷஸஹு ஆடிமீ ௰௬உ } வ. உ. சிதம்பரம்பிள்ளை.

# பதிப்புரை.

எனது தலைவியே இச்சரித்திரத்தின் தலைவியா யமைந்ததைப்பற்றிப் பெருவகை யெய்துகின்றேன். அவளை யான் பெற்றதும், அவளோடு யான் வாழ்ந்ததும், அவளைப்பற்றிய பிறவும் இச்சரித்திரத்தில் ஒருவாறு கூறப்பட்டுள்ளன. அவளுடைய நற்குணங்களையும் நற்செயல்களையும் சரியாக எடுத்துக் கூறுதல் அரியதொரு செயலாமென்பது எனது துணிவு. இது நிற்க.

இச்சரித்திரத்தை இயற்றிய ம-ா-ா-ஸ்ரீ. சி. முத்து சுவாமிப் பிள்ளை எனது தந்தையவர்களது தங்கையின் குமாரர். அவர் எனக்கு இளையவராயினும் ஒழுக்கத்திலும் கல்வியிலும் எனக்கு மூத்தவரென்று கூறத்தக்க மேம்பாடுடையவராய் நின்று சில வருஷங்களுக்குமுன் சிவபதம் அடைந்தனர். ஒருவரால் வேண்டப்படாதும் ஒருவர் அறியாதும் அவர் இச்சரித்திரத்தை இயற்றிக்கொண்டுவந்து என்னிடம் அளித்தார். அவரது மற்றைய பாடல்களை வெளியிடுங்கால் அவரது சரித்திரத்தை வெளியிடக் கருதியுள்ளேன்.

இச்சரித்திரத்தின் முடிவில் சேர்க்கப்பட்டுள்ள "நூற்புற"த்திற் காணப்படும் கடிதங்கள் எனது மனைவியின் மரணத்திற்குப் பின்னர் எனக்கு வந்த எனது நண்பர்களின் ஆங்கிலக்கடிதங்களிற் சிலவற்றின் மொழிபெயர்ப்பு. இம்மொழிபெயர்ப்பைச் செய்து தந்தவர் எனது அந்தணநண்பர்களில் ஒருவர். அவரும் எனது இரண்டாம் மனைவியுமே இந்நூலை அச்சிடுமாறு என்னைத் தூண்டியவர். அதற்காக அவ்விருவருக்கும் யான் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன்.

திருமயிலை, சென்னை,<br>இராக்ஷஸ௵ ஆடி௴ ௰௬௨ } வ.உ. சிதம்பரம்பிள்ளை.

# பொருளடக்கம்.

# மெய்யறம்.

இதனைப்பற்றிய மதிப்புரைகளிற் சில:—

"ஸ்ரீமாந் வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்கள் இயற்றிய மெய்யறம் ஐந்தியலும் நூற்றிருபத்தைந் ததிகாரமுமாக முடிந்தநூல். ஐந்தியல்களாவன—முப்ப ததிகாரங்கொண்ட மாணவவியல், முப்ப ததிகாரங்கொண்ட இல்வாழ்வியல், ஐம்ப ததிகாரங்கொண்ட அரசியல், பத் ததிகாரங்கொண்ட அந்தணவியல், ஐந் ததிகாரங்கொண்ட மெய்யியல் என்பவை. ஒவ்வோரதிகாரமும் பப்பத்து வெண்செந்துறை கொண்டுள்ளது. முப்பாலில் அறமும் பொருளுந் தழுவி கால வேறுபாட்டிற்கு வேண்டும் விகற்பங் கூறலால் இந்நூல் திருவள்ளுவப்பயனுக்கு வழிநூலாக விளங்குகின்றது. மூதுமொழிக் காஞ்சி போன்று திட்டமும் நுட்பமுஞ் சிறந்த இழுமென் மொழியால் விழுமிய பொருள் உரைத்தலால் இந்நூல் தேரல் என்னும் வனப்புவாய்ந்தது. தமிழ்ப்புலவரே யன்றி இங்கிலிஷ் படித்த புலவரிற் பலரும் இந்நூலின் திறத்தை மெச்சுவர் என்பது துணிபு. ஒரு முறை கண்ணுறுவோர்க்கு இந்நூலின் அருமை தானே புலப்படுமாதலால், அதனை இங்கு விவரிப்பது மிகையாம். இந்நூல் நின்று நிலவுக என்பது என் வேண்டுகோள்."—ஸ்ரீமாந் தி. செல்வகேசவராய முதலியாரவர்கள், சுதேச பாஷைகளின் அத்தியக்ஷகர், பச்சையப்பன் உயர்தரக் கலாசாலை, சென்னை.

"இந்நூல் சிறுசிறு செய்யுளாக இனிய செந்தமிழ் நடையில் இயற்றப்பட்டிருப்பதால் தமிழ் நாடெல்லாம் பரவுமென்பது நிச்சயம். இது மனிதர்களுக்கு இன்றியமையாத நீதி சாஸ்திரங்களிலுள்ள நித்திய நீதிகளை எடுத்துக் கூறுவதால் தற்காலம் தமிழ்க் கட்டுக்கதைகளை மாத்திரம் படிக்க முற்படுகின்ற அநேகருடைய சுவைக்கு மேற்பட்டதா யிருக்குமென்பதில் சந்தேகமில்லை. இம்மேம்பாடே தமிழ் கற்கும் ஒவ்வொரு மாணவரும் இந்நூலைக் கற்கவேண்டுமென்பதற்குத் தக்க காரணமாகும். கலாசாலைகளைச் சேர்ந்த புத்தக சாலைகளில் அவற்றின் நிர்வாக கர்த்தர்கள் இந்நூலை வாங்கி வைப்பார்களானால் ஒரு பெரிய நன்மை செய்தவர்களாவார்கள்."—பிரஹ்மஸ்ரீ ப. வே. நரசிம்ஹ அய்யாவர்கள், சட்ட சபை அங்கத்தினர், சென்னை.

"இந்நூலிற் கூறியுள்ள அருமையான பொருள்களை யான் இனிதுணர்ந்தேன். இந்நூலை யான் பெரிதும் மதிக்கின்றேன். முற்காலத்திய திருவள்ளுவர் குறளை இக்காலத்திய கருத்துக்களால் மணப்படுத்தி அற்பக் கல்வியுடையாரும் உணரத்தக்கவாறு செய்யலாமென்பதை இந்நூல் காட்டுகின்றது."—பிரஹ்மஸ்ரீ. ச. இராஜகோபாலச்சாரியாரவர்கள், ஹைக்கோர்ட்டு வக்கீல், சேலம்.

"'மெய்யறம்' என்னும் நூலைப் படித்தேன். இதற்கு 'மெய்யறம்' என்ற பெயர் முற்றிலும் தகும். ஸ்ரீ-ஸ்ரீ சகஜாநந்த சுவாமி அவர்கள் 'வள்ளுவ ரெல்லையிம் மறைக்கு மெல்லையாம்' என்று சிறப்புப் பாயிரத்திற் கூறியது பூரண பொருத்த முடையதே. ஆசிரமம் நான்கையும், புருஷார்த்தம் நான்கையும் சுருக்கித் தெளிவுறப் போதிக்கும் சற்குருவென்றே இந்நூலைச் சொல்லலாம். இதன் வாக்கும், போக்கும், யாப்பும், பொருளும் கற்றோர் வியக்குங் காட்சியாக விளங்குகின்றன. இது பன்னூற்படித்துந் தடுமாறச்செய்யும் ஐயப்பாடுகளை அறவே யொழித்து உண்மையினுட்பட்ட நீதி யொன்றனையே எடுத்துக்காட்டும் இயல்பிற்று. இதனைத் தமிழின் தெளிவும், அறத்தின் தெளிவும், அறிவின் தெளிவுமென்றே கூறவேண்டும். இதனைத் தமிழுலகத்திற்குத்தந்து பேருபகாரம் செய்த ஸ்ரீமாந் பிள்ளையவர்களுக்குத் தமிழுலகம் என்றுங் கைமாறியற்ற இயலாது: இவர்கள் எண்ணிய கருமத்தை இறைவன் இனிது முடித்துத் தமிழுலகத்தை யுய்யச்செய்வானாக."—ஸ்ரீமாந் த. வேதியப்பிள்ளையவர்கள், கிம்பர்லே, தென் ஆபிரிக்கா.

"தமிழுலகஞ் செய்தபெருந் தவப்பயனாய் வந்துதித்த தகைமையோனே, அமிழ்தெனநீ யளித்தவரு மரியபெரு நன்னூல்க ளனைத்தும்பார்த்தேன், இமிழ்திரைமா ஞாலத்தி லிதுவன்று மெய்யறமென் றம்பூதுற்றேன், கமழ்தருபூ மாலை புனை சிதம்பரப்பேர்க் காவலனே களித்துவாழி.

"செய்யறங்கொள் சிதம்பரப்பேர்ச் சீமானே நீசெய்த சிறந்தநூலை, மெய்யறநன் னூலென்றே விளம்புவர் மேலோர்கள் மேன்மையில்லாப், பொய்யறநன் னூலொன்று போதித்தா யெனப்புகல்வேன் புகறல்பொய்யோ, செய்யறங்கொள் வள்ளுவர்போல் நேரறங்கொள் நேயாநீ நிகழ்த்துவாயே.

“கற்பணிசெய் வோர்பேருங் காசினியில் நிலைப்பதிலை கவி ணப்பூணும், பொற்பணிசெய் வோர்பேரும் பூவுலகில் நிலைப் பதிலை பொருள்நிறைந்த, சொற்பணிசெய் வோர்பேரே சூரி யன்போ லெந்நாளும் துலங்கிநிற்கும், நற்பணிசெய் சிதம் பரப்பேர் நாவலநீ யென்ஞான்றும் ஞாலம்வாழி.”—ஸ்ரீமாந் ஜி. சதாசிவம்பிள்ளையவர்கள், தலைமைத் தமிழ்ப்பண்டி தர், நாஷனல் ஹைஸ்கூல், நாகபட்டணம்.

“இந்நூல் ஸ்ரீமாந் வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்கள் கண்ணனூர் சிறையரணில் வசித்தகாலத்தில் இயற்றிய தமி ழ்ச் செய்யுள் நூல்களில் ஒன்று. இது திருவள்ளுவர் திருக் குறளுக்கு வழிநூல். திருக்குறளிற் கூறியுள்ள பொருள்களில் நமது நாட்டின் தற்கால நிலைமைகளுக்குப் பொருத்தமாகச சிலவற்றைத் தொகுத்தும் சிலவற்றை விரித்தும் இது கூறு கின்றது. ஒளவையாரது கொன்றைவேந்தன் சூத்திரத்தைப் போன்ற ஓவ்வோர் அடிச் சூத்திரத்தால் இது இயற்றப்பட் டுள்ளது. இது மாணவவியல், இல்வாழ்வியல், அரசியல், அந்தணவியல், மெய்யியல் என்னும் ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டிருக்கிறது. மாணவவியல் முப்பது அதிகாரங் களையும், இல்வாழ்வியல் முப்பது அதிகாரங்களையும், அர சியல் ஐம்பது அதிகாரங்களையும், அந்தணவியல் பத்து அதி காரங்களையும், மெய்யியல் ஐந்து அதிகாரங்களையும், ஒவ் வோர் அதிகாரமும் பப்பத்துச் சூத்திரங்களையும் கொண்டுள் ளன. நூலின் பொருள்களைப் பள்ளிச்சிறுவரும் தெள்ளிதில் உணருமாறு சூத்திரங்கள் இனிய செந்தமிழ் நடையில் ஆக்கப் பட்டுள்ளன. நூலில் ஏகதேசமாகக் காணப்படும் அரும்பதங் களுக்கு உரைகள் நூலின் முடிவிற் சேர்க்கப்பட்டுள்ளன. திருக்குறளுக்குப் பின்னர் இதுகாறும் இத்தகைய தமிழ் நூல் வெளிவந்திலது. திருக்குறளைக் கற்க விரும்புவோருக்கு இந் நூல் ஓர் உரை ஆசிரியர்போன்று வள்ளுவர் கருத்துக்களைப் பொள்ளென விளக்கும். திருக்குறளைக் கற்றுள்ள பண்டிதர் களுக்கும் இந்நூல் பல புதிய பொருள்களைத் தெரிவிக்கும். இவ்விரு திறத்தார்களுக்கும் இந்நூல் துணையாகுமென்றால் ஏனையோர்களுக்கு இந்நூல் எவ்வளவு பயன்படு மென்பது சொல்லாமலே விளங்கத்தக்கது. இந்நூற் பொருள்களின் அருமையும் பெருமையும் அவற்றைக் கூறியுள்ள திறமைப் பாடும் இந்நூலை ஒருமுறை பார்த்தமாத்திரத்தில் விளங்கும். தமிழ்மக்கள் ஒவ்வொருவரும் இந்நூலைக் கைக்கொண்டு கற்க வேண்டுவது அத்தியாவசியம்.”—இந்து நேசன், சென்னை.

"மெய்யறம் என்னும் இந்நூல் கொன்றை வேந்தன் என வழங்கும் சிறந்த நீதி நூலைப்போல் அரிய பெரிய நீதிகளை யெல்லாம் தன்னகத்துட் கொண்டு விளங்குகின்றது. "உருவுகண் டெள்ளாமை வேண்டும்" என்றதிலக்காக மிகச் சுருங்கிய சொற்களா லாக்கப்பட்ட சிறுசிறு பாக்களாலமைந்த இந்நூல் 10 பாவுக்கு ஓரதிகாரமாக 125 அதிகாரங்கட்கு 1250 பாக்களடங்கப் பெற்றது. இவ்வதிகாரங்களில் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் புருஷார்த்தங்களை விளங்கக் காணலாம். மற்றும் ஒரு மனிதன் தெரிந்துகொள்ளத்தக்க எல்லாவித அறிவையும் தெள்ளிது புலப்படுத்தும் பெருமை பெற்றுள்ளது இது. அணுவைத் துளைத் தேழ் கடலைப் புகட்டியது போல ஒவ்வொருபாவினும் அமைத்துள்ள அரும்பெரும் பொருட் பெருக்கத்தை நோக்கி வியவாதார் இரார். இத்துணைச் சிறப்புவாய்ந்த இவ்வரிய நூலை இயற்றிய உலகப்பிரசித்தரான ஸ்ரீமாந். வ. உ. சிதம்பரம்பிள்ளையவர்கள் கவிராஜ குடும்பத்தில் பிறந்தவர்களென்பதை இந்நூல் நன்கு வெளியிடுகின்றது. * * *."—வித்தியாபாநு, மதுரை.

"மெய்யறம் என்னும் இந்நூலும் நமது தேசபக்த சிரேஷ்டரான ஸ்ரீமாந் வ. உ. சிதம்பரம் பிள்ளை யவர்களால் இயற்றப்பட்டதேயாம். இது முற்காலத்திலிருந்த வள்ளுவரும், ஒளவை நாச்சியாரும் இயற்றிய நூல்களுக் கொப்ப அறம், பொருள், இன்பம், வீடு என்னும் எல்லாவற்றையும் ஒருங்கே போதிக்கும் நீதி நூலாகும். அவ்விருவர் காலத்திற்குப் பின்னர் இதுகாலம்வரை இப்படிப்பட்ட திட்பநுட்பமான நூல் எவராலும் இயற்றப்பட்டிருப்பதாக நாம் அறியோம். இதைச் சிறுவர் முதல் வித்வான்கள் இறுதியாக யாவரும் கைக்கொண்டு வாசித்துப் பயன் அடைதல் பொருந்தும் என்போம் நாம்."—விவேகபாநு, டர்பன், தென் ஆபிரிக்கா.

"இது ஸ்ரீமாந் பிள்ளையவர்கள் இயற்றியதே. எளிய நடையில் கவிதை செய்யும் கடுமையான தொழிலில் பிள்ளையவர்களின் அருமையான வாக்கு வைபவம் என்னென்று புகழ்வோம்! இதுபோன்ற கிரந்தங்கட்கு நாம் அபிப்பிராயம் தருவது மிகையாகும். அறிந்தவரே இதன் பெருமையை அறிவார்!"—பிரஜாநுகூலன், ஸ்ரீரங்கம்.

---

# பாடற்றிரட்டு.

இதனைப்பற்றிய மதிப்புரைகளிற் சில :—

"இப்புத்தகத்திலுள்ள பாக்களை இயற்றிய ஸ்ரீமாந் வ. உ. சிதம்பரம் பிள்ளை யவர்களைப்பற்றி நாம் விசேடித் தெழுதவேண்டியதொன்று மில்லை. உலகமறிந்த தேசாபி மானியாகிய இவர்களைப்பற்றி எழுதுவது மிகையேயாகும். இப்புத்தகத்தில் இவர்கள் சிறைவாசத்திற்கு முன் பாடிய பல செய்யுள்கள் முதற்பாகமாகவும் கோயமுத்தூர் கண்ணனூர்ச சிறை வாசகாலத்தில் பாடிய பல தனிப்பாக்கள் இரண்டாம் பாகமாகவும் சேர்க்கப்பட்டுள்ளன. பாடல்களெல்லாம் நவின் றோர்க்கினிய நன்மொழிகளால் விழுமியபொருள் பயக்குமாறு இனியஓசை கொள்ள யாக்கப்பட்டுள்ளன. தம் பிதா, மனைவி, முதலிய பலர்க்குக் கடித முகமாக எழுதிய கவிகள் மிகவும் உருக்கந்தந்து விளங்குவன. நீதிபோதனைச் செய்யுள்களோ பண்டைக்கால நீதிநூல்களோடொப்பத் திட்ப நுட்பங் கொண்டுள்ளன. ஈகை, அன்பு, உண்மை, ஊழ்வலி, முயற் சித்திறம் முதலிய பல விஷயங்களைப்பற்றிய அருமையான செய்யுள்கள் பல இதனுட் காணப்படுகின்றன. ஒருவன் துன் பம் வந்தகாலத்துக் கலங்காது அதனையே இன்பமாக நினைத் தல் அத்துன்பத்தை வெல்லத்தக்க கருவியாம் என்பதை இப்புத்தகத்துள் நன்கு காணலாம். இஃது அகச்சிறப்புக் களுடன் நல்ல கடிதம், நல்ல அச்சு, பயிண்டு ஆகிய புறச் சிறப்புக்களும் பெற்றுளது."—விவேகபாநு, மதுரை.

"இந்நூலிலுள்ள பாக்கள் நம் தேசாபிமானச் செல்வ ரான ஸ்ரீமாந் வ. உ. சிதம்பரபிள்ளையவர்களால் சிறைக்குச் செல்லுமுன்னும், சென்றபின்னும் பல சமயங்களில் பாடப் பட்டவை. 'தனிப்பாடற்றிரட்டு' என்னும் புத்தகத்துக்குப் பின், தமிழ் வித்துவான்கள் சமயாசமயங்களில் பாடியவை களைத் தொகுத்து வெளிவந்ததில் இதற்கு முன் 'பாவலர் விருந்து' ஒன்றுதவிர வேறு கண்டிலேம். மேலும், இப் பாடல்களில் பெரும்பாலன வெண்பாக்கள். வெண்பாக் களில் சமயத்துக்கேற்றபடி பாடியவர்--ஸ்ரீகாளமேகப் புலவருக்குப் பின்—அரியர். இக்காலத்தே இவ்வருமையான செந்தமிழ்ப்பாக்களைக் காணுதல் வியத்தற்கு உரிய தொன் றும். ஆதலின், ஒவ்வொருவரும் இதனை வாங்கிப் படித் தல் நன்மையே பயக்கும் என்போம்."—விவேகபாநு, டர் பன், தென் ஆபிரிக்கா.

“இப்புத்தகத்திலுள்ள பாக்கள் சிறந்த தமிழ்நடையில் இயற்றப்பட்டிருப்பதுடன் மனத்தை உருக்கத்தக்கவையாயும் தேசாபிமானம் நிறைந்தவையாயும் இருக்கின்றன. இப்பாக்களிற்சில மிக மிக உயர்ந்த தமிழ் இலக்கியங்களின் பாக்களுக்குச் சமமாயிருக்கின்றன.”—பிரஹ்மஸ்ரீ. இராஜகோபாலச்சாரியாரவர்கள், ஹைகோர்ட்டு வக்கீல். சேலம்.

“நமது தேசாபிமானியாகிய ஸ்ரீமாந் வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்கள் பல சமயங்களில் பாடிய பாடற்றிரட்டு மனித சமூகத்திற்கு அவசியம் வேண்டுவனவாகிய ஈகை, அன்பு, உண்மை முதலியவைகளையும், ஊழின்வலிமை இத்துணைத்தென்பதையும், அவ்வூழையும் மெய்ம்முயற்சியினால் வென்றுவிடலாமென்பதையும், துன்ப மென்று சொல்லப்படுவன அனைத்தையும் இன்பமென்று நினைக்கின் அவை அக்கணமே இன்பமாக மாறிவிடுமென்பதையும், கடவுளையும் ஆன்மாவையும் பற்றி மனிதர் அறியவேண்டிய அநேக விஷயங்களையும் இனிய தமிழ்நடையில் தெளிவாகக் கூறுகின்றது. இந்நூலை நமது நாட்டார் வாங்கி வாசித்து மேம்படவேண்டுமென்று யான் கோருகிறேன்.”—சேஷாத்திரி அய்யங்கார், தமிழ்ப் பண்டிதர், பாதூர்.

“நமது தேசாபிமானத் தலைவரும், மதுரைத் தமிழ்ச்சங்கப் புலவரும், பொதுமறையின் தற்கால உரையாசிரியருமாகிய ஸ்ரீமாந் வ. உ. சிதம்பரம்பிள்ளை யவர்களது பாடற்றிரட்டு நமது மதாச்சாரியர்களும் தமிழ்ப்பண்டிதர்களும் வாசிக்கத் தக்க பல அரிய விஷயங்களையும் ஒரு பெரிய நூலிற்குரிய பல சிறப்புக்களையும் கொண்டுள்ளது. இதனைத் தமிழ்மக்கள் ஒவ்வொருவரும் கைக்கொண்டு கற்கவேண்டு மென்பதும் இது நிலவுலகில் நீடுநின்று நிலவவேண்டுமென்பதும் எனது கோரிக்கை.”—ஸ்ரீ சகஜாநந்த சுவாமியவர்கள், சென்னை

---

# அகமேபுறம்.

இதனைப்பற்றிய மதிப்புரைகளிற் சில :—

“இந்நன்னூல் மிஸ்டர் ஜேம்ஸ் ஆலன் என்பவரால் இயற்றப் பெற்றுள்ள ஆங்கிலநூலின் மொழிபெயர்ப்பாம். மொழிபெயர்ப்பாசிரியர் தேசாபிமானியென ஜெகஜோதியாய்

விளங்குபவரும் நம் நட்பிற் கோர் வைப்பனையாரும் ஆங்கில திராவிட வித்வத்சிகாமணியுமாகிய ஸ்ரீமாந் வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்கள். சில பல ஆங்கிலமொழிபெயர்ப் பாசிரியர் களைப்போலப் பாதி யாங்கிலமும் பாதித் தமிழுமாகக் கலந் தெழுதாமல் தனித் தமிழ்நூலென்று கூறும்படி செந்தமிழ்த் தெளிமொழித் தொடரில் பெரிய விஷயத்தை மிக எளிதாக யாரும் அறிந்து பயன்படும் வண்ணம் நமது ஸ்ரீமாந் பிள்ளை யவர்கள் மொழிபெயர்த்திருப்பது பாராட்டிப் பரவத்தக்கது. இந்நூலுக்குமுன்னும் நமது கனம் பிள்ளையவர்கள் மனம்போல வாழ்வு என்னும் அரிய நூலை (மொழிபெயர்த்துத்) தமிழுலகம் களிக்குமாறு வெளியிட்டுதவியிருக்கிறார்கள். நமது பிள்ளையவர்கள் அருமையும் பெருமையுமான நூல் களைத் தமிழுலகத்துக்கு உதவிவரும் உரிமை பெற்றிருத் தற்கேற்ப இவ்வழகிய நூலும் அவர்கள் மொழிபெயர்ப் புக்கிலக்காகி விளங்குதல் நமது தமிழ் மக்களனைவருக்கும் பெருமகிழ்ச்சி விளைக்குமென்பது உண்மையிலும் உண்மை யாம். நமது ஆண்பாலார் பெண்பாலார் யாவருக்கும் வேண் டிய அரியநூல் இதுவாதலால் இதைத் தருவித்துப்படித் துப் பயன்பெறுவாராக.''—நீலலோசனி, நாகை.

''இந்நூலை யான் வாசித்தேன். படித்த இந்தியர்கள் பொது ஜனங்களுக்குச் செய்யவேண்டிய மிகமிக முக்கிய கடமைகளுள் ஒன்று மேல்நாட்டு நூல்களிற் சிறந்தவற்றை யெல்லாம் சுதேசபாஷைகளில் மொழிபெயர்த்துக் கொடுப் பதே. ஸ்ரீமாந் சிதம்பரம்பிள்ளை யவர்கள் தமது இக்கட மையை ஜேம்ஸ் ஆலனது நூல்களை மொழிபெயர்த்தலாற் செய்துகொண்டிருக்கின்றார்கள். பிள்ளையவர்களது முயற்சி நன்றாகவே முடிந்திருக்கிறதென்று யான் நினைக்கிறேன். இந்நூல் சாதாரணக் கல்வியுள்ள தமிழர்களும் உணரத்தக்க வாறு இனிய செந்தமிழ் நடையில் எழுதப்பட்டுள்ளது. இது பலராலும் வாசிக்கப்பட்டு மதிப்புப் பெறுமென்று யான் நம்பு கிறேன். கலாசாலைகளில் இந்நூலை ஒழுக்கப்பாடப் புத்தக மாக ஏற்படுத்தலாம் அல்லது உபயோகிக்கலாம் என்று யான் நினைக்கிறேன்.''—பிரஹ்மஸ்ரீ. ப. வே. நரசிம்ஹ அய்யரவர் கள், சென்னை சட்டசபை அங்கத்தினர், சேலம்.

---

# மனம்போல வாழ்வு.

இதனைப்பற்றிய மதிப்புரைகளிற் சில :—

"இந்நூல் மிகப் பிரசித்திபெற்ற ஜேம்ஸ் ஆலன் என்னும் ஆங்கிலப் பண்டிதர் இயற்றியுள்ள மிக அழகிய நூல்களில் ஒன்றன் மொழிபெயர்ப்பு. இதன் தமிழ் நடையும் சொற்களும் மிக இனிமையாகவும் ,தெளிவாகவும், மனத்தைக் கவரத்தக்கன வாகவும் இருக்கின்றன. இந்நூலை இயற்றியதற்காக ஸ்ரீமாந் பிள்ளைவர்களுக்குத் தமிழுலகம் மிகவும் கடன்பட்டுள்ளது. தமிழ் ஞானிகளும் யோகிகளும் சொல்லியுள்ள விஷயங்களே இந்நூலிற் சொல்லப்பட்டுள்ளன. இதனைத் தமிழ் மக்கள் ஒவ்வொருவரும் கற்றுணரவேண்டுவது அவசியம்.—" தேன் இந்தியா மெயில், மதுரை.

"இம்மொழிபெயர்ப்பு மிகநன்றாகவும் அழகாகவும் செய்யப்பட்டுள்ளது. இதன் தமிழ்நடை மிக இனிமையாகவும், தெளிவாகவும்,சாதாரண ஜனங்களுக்கும் விளங்கக்கூடியதாகவும் இருக்கிறது. இப்புத்தகத்தை யாவரும் வாங்கிப் படிக்க வேண்டுமென்று நாம் கோருகிறோம்-"—ஹிந்து, சென்னை.

"இந்நூல் தென்னாட்டிற்குத் திலகம்போன்ற தூத்துக்குடியில் "சுதேச ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனியை ஸ்தாபித்து, இந்திய மாதாவுக்குத் திருத்தொண்டு புரிந்து வந்து இராஜநிந்தனைக் குற்றத்துக்குள்ளாகி சிறைவாசத்திலிருந்து வருகிற ஸ்ரீயுத சிதம்பரம் பிள்ளையவர்கள் ஆங்கிலத்தின்நின்று மொழிபெயர்த்த நூலாகும். இது பல அரிய விஷயங்களடங்கப் பெற்றிருக்கிறது. பிள்ளையவர்கள் தம்முடைய ஜெயில் வாசத்திலுங்கூட இந்நாட்டார்க்குதவிசெய்ய வேண்டுமென் றெண்ணியே இத்துறையி லிறங்கியிருக்கிறார்கள் என்பது மிகையாகமாட்டாது."-கமலாஸனி, திருவாரூர்.

"இம்மைமறு மையின்பயனை யெளிதாக வேயறிந்திங் கெவரு நாடிப், பொம்மலுறு வீட்டின்ப மடைதற்குப் புனித மிகும் பொருள டக்கி, அம்மம்ம மனம்போல வாழ்வென்ற வொருநூலை யளித்தான் றேசம், செம்மைபெற வவதரித்த சீமானுர் சிதம்பரநற் செல்வன் றனே."—சித்தாந்தசரபம் அஷ்டாவதானம் பூவை கலியாண சுந்தர முதலியாரவர்கள், சென்னை.

# வள்ளியம்மை சரித்திரம்.

## சிறப்புப்பாயிரம்.

பூவுல கின்கட் பொலிதரு பல்லுயிர்
தம்முள் மேன்மை சாரும் மாக்கள்
உய்வழி நான்கா ஓதும் நான்மறை;
அவ்வழி நான்கும் நான்கா சிரமம்
புகுவோர் யார்க்கும் பொருந்து மேனும்,
இல்லறம் புகுந்தோன் எவர்க்கும் உதவி
மூவிடத் தவர்க்கும் ஓவலில் நன்மை
பயக்கப் பயிறலின், அவனறம் பல்கால்
எவற்றினும் சிறப்புடைத் தென்ப மேலோர்.
அதுபற்றி யன்றே ஔவையும் முன்னாள்
"இல்லற மல்லது நல்லறம் அன்"றென்
றோதினள். அத்தகை யேதமில் நல்லறம்
குற்ற மின்றிக் குறைவற முற்றத்
துணைநல மாவது மனநல முடைய
மனைவி யொன்றே யாகும்: மற்றைச்
செல்வமெல்லாம் சிதையினும் சிதைக,
சுற்றம் யாவும் துறக்கினும் துறக்க,
மித்திரர் சத்துரு வாகினு மாகுக,
வாழ்க்கை பயன்பெறும். அன்றி யம்மனை
கணவன் சொல்கட் கிணக்க மிலாளாய்

ஏறுமா றாகி நடக்கின், அந்தோ!
அவரது வாழ்வு புவிமிசை மிக்க
பொன்னுடைத் தேனும் பொருளுடைத் தேனும்
புகழுடைத்தானும் இகழுடைத் தாகி
விழலுக் கிறைத்த நீரொக் கும்மால்.
அத்தகை மனையுடன் ஒத்துவாழ் தலினும்
அவ்வறம் துறந்த அவ்வறம் புகுதலே
நன்றென அறிஞர் என்றும் அறையினும்
அதனை யுணரா தவமே புரிவர்
புவியி லுள்ள புல்லறி வாளர்.
அங்ஙன மன்றி அமிர்த வசனியாய்,
இரவலர்க் கெல்லாம் இனியதா யாகி,
கணவன் சொல்லைக் கடவா தவளாய்,
அவன்உயி ராகவும் அவள்உட லாகவும்
அவன்நினை யாவும் அங்ஙன் இயற்றி,
நாணம் மடமுடன் அச்சம் பயிர்ப்பெனும்
நால்வகைக் குணனொடு மால்கொள் பொற்பும்
ஒன்றாய்த் திரண்ட ஒருவடி வினளாய்,
மாமிமா மர்முதல் வாய்த்தசுற் றத்தவர்
எவர்க்கும் இதம்செய் திதம்களிப் பவளாய்,
என்றும் காய்சினம் இறையும் இலாளாய்,
நன்றமை பெண்ணின் அரசிமக ராசி
என்ற வள்ளி யம்மையை யில்லாய்

ஆய்க்கப் பெற்ற மாத்தகை நண்பன்
சிதம்பர வேள்தன் சீர்பெறும் வாழ்வே
வாழ்வென மகிழா பலருமவ் வம்மையைப்
போற்றப் புகழுடம் பெடுத்துப் பூத
உடலம் துறந்ததை ஒண்பாவின் ஓதினன்
அளகை நகரின் அருகிற் பொருந்தும்
முடிமன் செய்த முதுதவப் பயனால் ருய

அங்குதித் தெங்கும் அளவிற் புகழ் நிறீஇ
அடிமுடி யின்றி யகண்டம தாகி
எங்கும் தானு யிலங்கும் ஏக
சச்சிதா நந்தத் தனிப்பரம் சுடரைத்
தாளுய் வணங்கி யூனமார் மண்பெண்
பொன்மேல் ஆசை மன்னு தகற்ற
முயலும் என்தன் முத்தைய மால்தான்
உலகிற் பெண்கள் உயர்தர
நடையயின் றழிவில் நலம்பெறு மாறே. ருசு

சுவாமி—வள்ளிநாயகம்.

---

## சாற்றுகவிகள்.

பாளையங்கோட்டை ஸ்ரீமாந் வ. சண்முகம்பிள்ளையவர்கள்
இயற்றியவை.

தேமாங் கனிகள் சிந்துபொழிற் றெய்வ நகராந் தென்னலை
கைப், பூமா னெங்கள் சிதம்பரவேட் புனிதை யகரா சிமலை
யாள், தூமா மதியிற் சிறந்தசொரு கற்பின் பொற்பைத்
தொகுத்தணியாப்,பாமா மலர்கொ ளொண்பாவிற் பகர்ந்தான்
பல்லோர் பயனுறவே.

கடிமன் னியங்கள் கறங்கொலிபோய்க் கடவு ளூட்டின்
கற்பகப்பூங்,கொடிமுன் னியங்க வரம்பையர்தங் கோல விழி
யாற் குறித்தயிர்க்கு, முடிமன் நகர முயல்தவத்தான் மூளைத்
தோ னறிஞன் முத்தையமால், அடிமன் வெண்பா வமிழ்த
மதை யாரே யயின்று தேக்கறியார்.

தன்னு யகனே தனைமதிக்கச் சார்ந்த புலவர் தாமதிக்க,
என்னு யகனும் வள்ளிநா யகனு மதிக்கு மேன்தெழில்வாய்,
பொன்னு யகத்தின் புகழ்விரிக்கும் பொருவி னூற்கு யானு
மென்றன், புன்னு வதனுற் சாற்றுகவி புகறல் சிறிதும்
போதாதே.

பற்றற் றொன்றே பற்றுதலிற் பதியே தானுப் பரிந்துறலின்,
முற்றுமறத்திற் றிறம்பாத மொய்ம்பி லானு முதுக்குறைவில்
இற்கு ளமைந்தும் பக்தியன்பி லிளையாத் தகையி லினிமை
யினில், வற்குன் றனைய பெரியோரில் வாழ்ந்தாள் யகிமை
வரம்புற்றே.

ஸ்ரீமாந்

வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்கள்

முதல் மனைவி

# வள்ளியம்மை சரித்திரம்.

---

## நூன்முகம்.

### விநாயகர் வணக்கம்.

செம்பொன் மகள்நேர் சிதம்பரவேள் முன்மனைவி
அன்புவடி வானவள்ளி யம்மைதான்—இம்பர்
மகராசி யென்பவள்தன் மாண்புரைக்கத் தந்தி
முகநாதன் தாள்பணிவேன் முன்பு. க

### சுப்பிரமணியர் வணக்கம்.

நன்னூல் இஃதெனவே நானிலமெல் லாம்புகழ
என்னூல் இனிதா யிவண்நிலவத்—தொன்னூல்
நிதம்போற்றும் சண்முகவேள் நீபமணி யெம்மான்
பதம்போற்று வேன்யான் பணிந்து. உ

### சரஸ்வதி வணக்கம்.

என்னு வதனில் இசைசேர் தமிழ்நினைக்கும்
முன்னே வரத்தொழுவேன் மொய்ம்பாக—நன்னு
மடந்தைகமழ் வெண்தா மரையாள்எம் மாண்பும்
அடைந்தவள்தன் மென்பூ அடி. ௩

## அவையடக்கம்.

நன்பாவில் மிக்க நலம்சேர் முதியோர்என்
புன்பாவில் குற்றம் புகலாரே—அன்பால்
அறியாத சேய்சொல் அமிழ்தமெனக் கொண்டின்
புறுவாரே பெற்ருேர் உவந்து. ௪

## நூற் காரணம்.

நல்லார் குணமுரைத்தல் நன்றெனமுன் ஒளவைசொன்ன
சொல்லாலும் இப்புவிவாழ் தோகையர்இந்—நல்லாளின்
நன்னீர்மை தான்அறிந்தெஞ் ஞான்றும் பயிலற்கும்
இந்நூல் பகர்ந்தேன் இசைந்து. ௫

## நூற் பயன்.

வான்மதியால் மிக்குயர்ந்த வள்ளியம்மை மாண்சரிதம்
பான்மையுடன் கேட்போரிப் பாருலகில்—மேன்மையு
இல்லறமாண் புற்றிங் கினிதுவாழ்ந் தேவீடும் [றும்
நல்லறமாண் பால்பெறுவர் நன்கு. ௬

## நூல்.

### நாட்டுச் சிறப்பு.

சந்தஞ் செறியுந் தமிழ்மலையில் தண்முகில்பெய்
துந்துந் திரையோ டறும்பொருநை—கந்தம்
கமழ்பூந் தடமுங் கழனியுமற் றெங்கும்
அமிழ்தாம் எனப்பரவும் ஆங்கு. எ

செந்நெல்நீங் கன்னலாத் தீங்கன்னல் பூங்கமுகா [ன்
மன்னிவளர்ந் தோங்கும் வயல்தோறும்—அன்னந்தா
மென்முட்டை யாமெனவே வெண்டரளத் தைச்சேர்க்கும்
தன்முட் டைகளோடுந் தான். அ

சாந்தமுஞ்செங் குங்குமமுந் தண்பளித முங்கமழப்
பூந்தடங்கள் தோறும் புனல்தோயும்—ஏந்திழையார்
மான்கள் எனமிளிரும் வாள்விழிக்கஞ் சிக்கெண்டை
மீன்கடுள்ளி யோடும் விரைந்து. கூ

வண்டின் னிசைபாட மாமயில்பூங் காவுதொறும்
செண்டுமுலை யார்போல் சிறந்தாடும்—கண்டுவந்து
பொன்கொடுப்பார் போல்கடுக்கைப் போதை மடமந்தி
தன்கரத்தா லேயுதிர்க்கும் தான். ய

மன்றல்மிகுஞ் சாந்த மணங்கமழ்ந்து தண்பொதியத்
தென்றலசைந் தாங்கே தினமுலவும்—இன்றமிழ்த்தண்
காவுறையுங் கிள்ளை கனிந்தே நிதம்பேசும்
நாவுறையுங் கோதகல நன்கு. யக

பொன்னு டனவேபல் போகஞ் சிறந்தோங்குந்
தென்னு டிசைபெருகுஞ் செந்தமிழ்நா—டின்னுட்டுக்
கொப்பாம் வளநா டுளதோ ஒலிகடல்சூழ்
இப்பார் தனிலே யிசைந்து. யஉ

## நகரச்சிறப்பு.

நந்தூர் வயல்சூழ்இந் நாடாம்மின் னாள்முகம்நேர்
செந்தூர் எனும்மாண் சிறந்தவூர்—பைந்தோகை
மாமயிலூர் வள்ளி மணாளன் மகிழ்ந்துறையுஞ்
சேமமுறும் நாளுஞ் சிறந்து. ௰௩

பொன்னகர மாதைப் புகழெழிலால் வெல்வேனென்
றிந்நகர மாதங் கெழுவதுபோல்—மின்னுமணிக்
கோபுரங்கள் மாண்போடு கோலமுறும் வானவர்தம்
மாபுரங்கீ ழாக வளர்ந்து. ௰௪

அன்னந் தனைநிகரும் ஆயிழையார் மீதுலவி
மன்னும் எழின்மா மணிமாடம்—வன்ன
மயிலும்பைங் கிள்ளைகளும் வாகா யுலவும்
சயிலந் தனைநிகரந் தான். ௰௫

நீராடி மேடையிலே நின்றுலவும் நேரிழையார்
சீரா உலர்த்துஞ் செழுங்கூந்தல்—காரா
உலவும் அதனிடையே உண்டாம் எழில்கார்
விலகியொளிர் மின்போலு மே. ௰௬

வார்பொருந்தும் பூண்முலையார் மாடந் தொறும்வளர்க்கும்
ஏர்பொருந்துங் கிள்ளைகளும் இன்தமிழால்—சீர்பொருந்தும்
சண்முகனே யெங்கள் சரவணப வாவென்றே
பண்ணுடனே பாடும் பயின்று. ௰௭

சுந்தரத்தால் வென்ற துகளறுபல் கேள்விசால்
மைந்தருக்குங் கோல மடவார்க்கும்—ஐந்தணையில்
ஊடலுறும் போதங் குருவம் கரந்தனங்கன்
ஆடவரை வெல்வான் அனன்று. ௰௮

பொன்னகர்மின் ஞரும் புயல்தவழ்மேல் மாடமுறும்
இந்நகர்மின் ஞரும் இனிதாக—மன்னிவிளை
யாடுவார் வீணைதனில் ஆறுமுகன் சீர்களையே
பாடுவார் செந்தமிழால் பண். ௰௯

வண்டமிழின் ஓதை மறையோர் மறையோதை
கண்டுமொழி யார்பாடுங் கானஒலி—எண்டிசையுஞ்
சேர்ந்தே தினம்பரவுஞ் சிற்பொருளாஞ் செவ்வேளைச்
சார்ந்தோர் புகழெனவே தான். ௨௰

மஞ்சு தவழ்மேல் மணிமாடம் மீதுலவும்
அஞ்சொல் மடவார் அணிக்குத்தோற்—றஞ்சியே
மீன்தோன்றும் விண்மேல் விரைந்து வரும்மின்னல்
தான்தோன்றி நீங்கும தளர்ந்து. ௨௧

திங்கள் வதனச் சிறந்தவெழி லால்வென்ற
மங்கையரை வெல்வேன் எனவளர்ந்தே—அங்கதிக
தேசுண் டெழில்தான் சிறந்துமுன் வந்தேபின்
ஆசுண் டொளிமழுங்கு மாம. ௨௨

வீதிதொறும் கந்தவேள் மிக்கதுதி யேதினமும்
ஓதுமடி யார்க்கும் உறவோர்க்குங்—கோதிலன்பால்
நன்மொழிகள் பேசி நயந்தருந்தச் செய்வார்கள்
இன்னமுதம் ஆங்கே யினிது. ௨௩

எந்த வரையும் இணையிலா திங்குநிற்கும்
சந்தவரை யின்பெருமை சாற்றரிதே—பந்தம்
அகன்றார் உளம்போல் அகன்றோங்கும் மேல்மேல்
குகன்றான் உறைதலின்அக் குன்று. ௨௪

வள்ளிதெய்வ யானை மகிழ்நன்கோ யில்பெருமை
உள்ளின் கயிலையென ஓங்குமே—தெள்ளியநல்
சீர்பெறுமெய்ஞ் ஞானம் திகழ்எம் இறைவனடி
யார்பெருமை போலுமே யாம். ௨௫

ஆதிநடு வந்தமிலா தாநந்த மாய்விளங்கும்
சோதிகுகன் என்றே துதியோதை—மோதுமொலி
வாரிதியை மிஞ்சுமறு மாமுகன்தன் கோயிலினுள்
சீருடனே நாளுஞ் சிறந்து. ௨௬

பொன்னின் மணியின் பொலிந்துயர்மா மண்டபத்தில்
தன்னிகர்தா னேயாகுஞ் சண்முகன்தன்—சந்நிதிமுன்
பான்மொழிமின் னார்ஆடப் பண்சேர் முழவுமுகில்
போன்முழங்கும் தாளம் புரிந்து. ௨௭

பொன்னகரி லுள்ளபல போகம் பொலிந்தோங்கும்
அந்நகரில் எண்ணுன் கறமோங்கும்—அந்நகர்வாழ்
மாந்தரிடம் கல்வி வளரின்பம் ஒப்புரவு
வேந்தரருள் ஓங்கும் மிகுந்து. ௨௮

வள்ளியம்மை பிறப்பு

இன்ன வளமோ டெழில்சேர் நகருதித்து
மன்னுபுகழ் பெற்றஉயர் வள்ளியம்மை—தன்மரபும்
வண்சரித முந்தெரிந்த வண்ணமே செப்பிடுவேன்
பண்புறவே யானும் பரிந்து. ௨௯

சைவ நெறிசேருந் தன்மமுடன் எம்மாண்பும்
எய்தும்வே ளாளர் இனத்தினிது—துய்தாய்த்
திகழ்தா ரகைக்குழுவில் திங்களென ஆங்கோர்
தகவோ டுதித்தவள்ளல் தான். ௩௰

பாகுமொழி யார்மயலாய்ப் பார்க்கும் எழில்வீர
வாகுவெனும் பேரான் வளர்புகழான்—வாகுடனே
பெற்றமைந்த ரிற்சிலர்வின் பெற்றனர்சில் போதினில்வாழ்
வுற்றமைந்தர் ஐவர் உளர். ௩௧

சண்முகம்பிள் ளையெனவே சாற்றுவள்ளி நாயகன்சீர்
கொண்முகத்தை யல்பாகன்குஞ்சரவேள்-வண்மைசால்
செய்யோன் கிருஷ்ணவள்ளல் சிரோங்கி யேநாளும்
மெய்யேதான் சொல்வோர் விழைந்து. ௩௨

புவிமெச்ச ஒங்கும் புகழ்மிக்கோன் ஆகுஞ்
சிவசுப் பிரமணிய தீரன்—நவில்பள்ளிக்
கூடத்துப் பிள்ளையென்று கூறுவர்க ளாமிவனை
நீடுற்ற சீர்தான் நிறைந்து. ௩௩

பாண்டவரே போல்சிறந்த பண்பினரே யாகவிளங்
காண்டகையோ ராங்கிவர்க ளவர்களில்—நீண்டபுகழ்
பெற்றுயர்ந்தோன் சீலம் பெறுவள்ளி நாயகமாங்
கற்றுயர்ந்தோன் மிக்க கலை. ௩௪

அன்னவன் பெற்ற அருமைத் திருமைந்தன்
மன்சுப் பிரமணிய மாவள்ளல்—நன்னிதிசால்
சீருற்றோன் மிக்க சிறப்புற்றோன் மற்றிவன்போல்
யாருற்றார் வண்புகழே யீங்கு. ௩௫

ஆங்கவன்முன் செய்த அருந்தவத்தி னால்பெற்ற
பூங்கொடியார் மூவரில்இப் பொன்னனையாள்—ஓங்குதமி
ஆயிரத்தைம் பத்துமூன் றாண்டானி மாதத்தில் [ழ்
தாயளிக்க வந்தாள் தரை. ௩௬

மின்னனையாள் அன்னைபிதா மேன்மையுறு வள்ளியம்மை
என்னுந் திருநாமம் இட்டழைத்திப்—பொன்னினையாம்
பெற்றேரும்முன் செய்த பெருந்தவம்யா தோவென்றின்
புற்ருர் வளர்த்தார் உவந்து. ௩௭

பொன்மகளே போல்வாள் புகழ்போலும் புங்கமுடன்
அன்னவள்தான் செய்த அறம்போலும்—நன்மதியே
போலுந் தினந்தினமும் பொற்புடனே தான்வளர்ந்தாள்
சேலுண்கண் நல்லாள் சிறந்து. ௩௮

பெற்றேர்கள் முன்செய் பெருந்தவப்பே ரோர்வடிவாய்
உற்றதுபோல் இங்கேவந் துற்ருளுக்—குற்றபேர்
வள்ளியம்மை யேனும் மகராசி யென்றழைப்பர்
ஒள்ளியநற் சீரால் உவந்து. ௩௯

மின்னேர் இடையாள் விளங்கெழிலும் நன்றேகொள்
அன்னம் நிகர்குணமும் ஆராய்ந்தோர்—அன்னவளைப்
பெற்ருரே பெற்ருர் பெருந்தவப்பே றென்றின்பம்
உற்றே புகல்வார் உணர்ந்து. ௪0

நன்சொல்லே நாளும் நவில்வாள் நறுங்குதலை
இன்சொல்லே தஞ்செவிகேட் டின்புறுவர்—முன்செய்
அருந்தவப்பே றுற்றேமென் றங்கவள்தாய் தந்தை
மருந்தருந்தி ஞர்போல் மகிழ்ந்து. ௪௧

நல்லுணர்வாள் இற்பிறந்த நாள்முதற்கொண் டாங்கேநற்
செல்வமும்பல் சீருஞ் சிறந்ததனுல்—நல்ல
மகராசி யென்னும்பேர் மங்கைக்கிங் காருந்
தகவாகும் என்றுரைப்பர் தாம். ௪௨

மாங்குயில்நேர் இன்சொல் மகளி ரொடுதினமும்
ஆங்குவிளை யாடும் அவள்செயலைப்—பாங்கியரெஞ்
ஞான்றும் புகழ்வார் நலமுடையா ளைப்பிரிந்தோர்
ஞான்றும் இரார்காண் நயந்து சங

பின்னார்க ளோடும் விளையாடி வீணைகப்
பண்ணை யுங்கழிபாள் பால்மொழியாள்—நன்னாவிற்
செந்தமிழே பாடுவாள் சின்மயமே செந்தில்நகர்
வந்தகுகா என்றே மகிழ்ந்து. சச

அன்னைபிதா வோடும் அறுமுகன்வா ழுங்கோயில்
சந்நிதிமுன் போய்நின்று தான்பணிவாள்—வன்ன
மயில்வாக னுஉமையாள் மைந்தனே சந்த
சயிலா எனப்போற்றித் தான். சரு

தன்னுடனே சேர்ந்துவிளை யாடுமிளந் தையலர்க்கு
நன்மதியே கற்பிப்பாள் நாள்தோறும்—நன்மதிசேர்
மேலோர்கள் தம்மை விரும்பியடுத் தாரைத்தம்
போலாக்குந் தன்மையே போன்று. சசு

பேதை பெதும்பை யெனும்பருவம் பின்போக
மாதுமங்கை யின்பருவம் வாய்ந்தனளே—சீதமதி
முன்திதியில் மேன்மேல் முறையே வளர்ந்தோங்கித்
தன்திகழ்தே சுற்றிடல்போல் தான். சஎ

கன்னி ருதுவாகிக் காப்புடைதன் இல்லத்து
மன்னியுறை போது மயிலோற்கு—நன்னிலத்து
நாளமலர்மா லைதொடுத்து நல்கி யவன்தனிரு
தாள்மலர்போற் றித்துதிக்குந் தான். சஅ

## வள்ளியம்மைக்கு மணமகன் தேடுதல்.

அன்னம் பிறந்த அருமரபின் மாண்புக்கும்
மின்னாள் அறிவிற்கும் மேன்மைக்கும்—கன்னி
வனப்புக்கும் ஏற்ற மணமகனிங் குண்டோ
எனப்புகல்வர் மின்னார் எடுத்து. சக

திருந்திழையைத் தம்மருமைத் தேவியாக் கொள்ள
அருந்தவஞ்செய் தோர்புவியில் யாரோ—தெரிந்திலேம்
நங்கையினைத் தம்முடைய நாயகியாக் கொண்டவரே
புங்கவராம் என்பர் புகழ்ந்து. ருய

மின்னனையாள் தந்தைசில வேளைக்கு முன்னாகப்
பொன்னுலக முற்றதனாற் பொற்கொடியின்—அன்னைதான்
மாதினைத் தக்க மணமகனுக் கீயநினைத்
தோதினள்சுற் றத்துளரி யோர்க்கு. ருக

கன்னி மணப்பருவம் கண்டதனால் கல்வியொடு
நன்னெறியே பற்றிநிற்கும் நம்மரபின்—மன்னனைய
ஓர்மா மகன்பார்த் துறுநன் மணஞ்செய்தல்
சீர்நல்கும் என்றாள் தெளிந்து. ருஉ

அன்னவைகேட் டாங்கவர்கள் அன்போடுவகையராய்
இன்னவைதான் சொல்வார் இனிதாகத்—தென்னளகை
என்றோர் நகருண்டாம் இப்புவியில் எப்பதிக்கும்
நன்றேயாம் அந்த நகர். ருங

அந்நகரைக் காக்குமுல காண்டாள் கிருபையினால்
மன்னுசீர் பெற்றே மகிழ்ந்தினிது—முன்னர்
புவிராசர்க் காத்த சிதம்பரமாம் போதக்
கவிராசன் செய்தவத்தின் கண். ருச

வந்துதித்த வள்ளியப்ப வள்ளல் அருந்தவத்தால்
சிந்தைமகிழ்ந் தின்பஞ் சிறந்துபெற்ற—மைந்தன்
உலகநா தேந்திரன்வான் ஓங்கிப் பரவும்
அலகிலா வண்புகழா னும். ருரு

மன்னர் புகழும் மதியமைச்சன் நம்பீசன்
தன்னருளைப் பெற்ற தகைமையோன்—மன்னுலகாள்
கோயில் திருப்பணிகள் கோடிவனவேசெய்தோன்மெய்
யாயும் அறிவுடையோன் ஆங்கு. ருசு

அன்னவன்முன் செய்த அருந்தவப்பே றம்புவியின்
மன்னறமுஞ் சேர்ந்தோர் வடிவாகி—நன்மகனா
வந்தோன் சிதம்பரமாம் வள்ளல் எவர்க்குமின்பந்
தந்தோங்குந் தன்மையினன் தான். ருஎ

விந்தையுளோன் தம்பியர்கள் மீனாட்சி சுந்தரவேள்
சுந்தரஞ்சேர் கல்யாண சுந்தரமால்—மைந்தனது [மை
முன்வந்தாள் செந்தேன் மொழியாள்பேர் வள்ளியம்
பின்வந்தாள் மாலையம்மை பேர். ருஅ

கல்வியொடு நெஞ்சில் கருணை மிகவுடையோன்
நல்வடிவோன் மிக்க நலமுடையோன்-தொல்புவியோர்
போற்றும் புகழுடையோன் பொய்தீர் அறனெல்லாம்
ஆற்றும் அகமுடையோன் ஆங்கு. ருகூ

மேலோர்தங் கேண்மை மிகவுடையோன் மெய்யறிஞர்
போலே யறிவும் பொலிவுற்றோன்—சால
அவரடியே போற்றுவோன் அன்னோர் அருள்சேர்
தவமுடையோன் என்னான்றுந் தான். சுய

மண்ணீர் அனல்அனிலம் வானமுதல் மற்றுமாய்
நண்ணுபல தேவுமாய் ஞானமுமாய்—எண்ணரிதாய்த்
தான்விளங்கு மோர்பொருளைச் சச்சிதா நந்தத்தைத்
தான்வணங்கு வோன்மதியால் சார்ந்து. சுக

என்மாறி விண்மீ தெழுந்திடினும் இன்னவன்தன்
சொன்மாறான் சொல்லரியதூய்மையோன்-தன்மயிவண்
ஓங்கி வளர்வதுபோல் ஓங்குபெருஞ் செல்வமுளான்
ஈங்கிவன்நேர் ஆவான் எவன். சுஉ

புத்தியால் மிக்க புகழ்செய்யும் நல்வக்கீல்
உத்தியோ கந்தான் உடையவனும்—சித்தம்
கலங்காதெக் கேசுங் கருத்துடனே பேசி
வெலுந்திறலோன் நூலால் விரைந்து. சுரு

எம்மரபி லேயும் இசைமிகக் கொண்டுள்ள
நம்மரபி லேயும் நமக்குரிய—செம்மைசால்
சுற்றத்தில் தோன்றியஇச் சுந்தரன்மின் னுக்கேற்ற
நற்றலைவ னேயாவன் நன்கு. சுச

இன்னவனுக் கேநம் எழில்சேர் நலமுடைய
கன்னி யிசைவாள்நற் காதலியா—நன்மைதனை
நாடுமே நன்மைசெந்தில் நாதன் திருவருளால்
கூடுமே யின்பம் குறித்து. சுரு

என்றிங் கிவரிசைப்ப ஏந்திழையாள் அன்னையுந்தான்
நன்றென்றே மிக்கின்பம் நண்ணினளாய்—அன்றுமுதல்
கந்தவே ளைத்தன் கருத்துருகப் போற்றுவாள்
இந்தவகை செய்யென் றினிது. சுசு

## மணமகன் வீட்டார் பெண் தேடுதல்.

ஈங்கேயிவ் வாறிருக்க ஏர்சேர் அளகையாம்
ஆங்கே யுறுஞ்செயலும் யான்அறைவேன்—பாங்காக
அந்நகரம் மன்னுஞ் சிதம்பரத்துக் கன்னிபிதா
நன்மணஞ்செய் யத்துணிந்தோர் நாள். ௬௭

மைந்தன் உயரெழிற்கும் மாண்புக்குந் தக்கவொரு
சுந்தரமு மொண்குணமுந் தோய்ந்தவளாய்—வந்துறும்பெண்
நம்மரபில் சான்ற நமக்குரிய சுற்றத்தில்
எம்மகளிங் குண்டுசொலும் என்று. ௬௮

தஞ்சுற்றத் தாருடனே தாமுந்தம் முன்புதல்வி
யஞ்சொல் பகர்வள்ளி யம்மையும்—செஞ்சொல்கொண்
டாராயுங் காலத்தில் அவ்வள்ளி யம்மைமிகச்
சீராகச் சொல்வாள் தெளிந்து. ௬௯

ஏரார் திருச்செந்தூர் இன்னகரில் பொன்மகட்கு
நேராமோர் பெண்ணுண்டு நீதியுணர்—பாரோர்
புகழ்சுப் பிரமணிய பூமான் புதல்வி
தகைமைக் குலக்கொடி தான். ௭௰

மகராசி யென்றழைக்கும் மாண்வள்ளி யம்மை
தகவார் சிதம்பரமென் தம்பி—அகமுறும்நற்
சீருடையபெண்ணென்றாள் சேயிழையுந்தன்பெற்றோர்
ஆர்வமொடு கேட்டிடவே யாங்கு. ௭௧

இம்மொழியைக் கேட்டவுடன் ஏந்திழையின் தந்தைசொலும்
செம்மொழியாள் இப்பொழுது செப்பியபெண்—செம்மையுள
செல்வற் கிசைந்தமிகு சீருடைய செவ்வியளே
சொல்லிற் குடிமாண்பும் தூய்து. ௭௨

யானுமிப்பெண் ணைக்குறித்தேன் என்னருமை வள்ளியம்மை
தானும் மொழிந்தாள் தகைமையொடு—மேன்மையுறு
நம்மரபில் சால நமக்குரிய சுற்றத்தில் [ம்
செம்மையுள துன்னில் சிறந்து. எங

என்றே யிவருரைப்ப எல்லோரும் உள்மகிழ்ந்து
நன்றேயாம் என்று நவின்றனர்காண்—அன்றேயோர்
நற்றினமுந் தாங்குறித்துநண்ணினர்பெண்கேட்கமணப்
பொற்றொடியின் இல்லமே போந்து. எச

மணமகட்கு முன்னுதித்த மாண்சூரி யத்தின்
கணவனுஞ் சூரியவேள் கற்றோன்—மணமகளின்
தந்தையுடை சோதரியின் தன்குமரன் பெண்கேட்க
வந்ததுகண் டுள்ளம் மகிழ்ந்து. எரு

அன்பின் முகமனுரைத் தன்னவர்கள் கூறியதை
இன்புடனே கேட்டுநனி யெண்ணியெலாம்-நன்கேதான்
அவ்வகையே செய்வமென்றான் ஆங்கெவருங் கூறினர்காண்
இவ்வகையே நன்றென் றெடுத்து. எசு

திருமணஞ்செய் நாளுடனே சீர்பெறுநல் ஓரை
அருமையுடன் தாங்குறித்தார் ஆங்கே—திருமணமும்
பெண்கிருகந் தன்னிலென்று பேசினார் பேரின்போ
டொண்குணத்தார் சால உவந்து. எஎ

மங்கலமா நல்ல மணமகட்கு நாயகன்பேர்
அங்கெவருஞ் செப்பினார் ஆயிழையார்—மங்கலமாச்
செய்வகையெல் லாஞ்செய்தார் சீர்சேர் மணவோலை
எவ்விடமும் விட்டார் இசைந்து. எஅ

மணமகன் தன் தந்தையொடு வந்தவரு மாங்கிவ்
வணமிசைந்து தம்பதியே மன்ன—மணமகற்குச்
செய்யிழையின் நன்மனையில் சீருடனே செய்செயல்கள்
ஐதுறவே செய்தனரிவ் வாறு. எசு

## திருமணச் சிறப்பு.

பொன்மகள்வாழ் பீடமெனும் பொற்புடனே புங்கமுற
நன்மணமா மண்டபமும் நன்காகப்—பொன்மிகுநல்
சீர்பெறவே செய்தனரிச் செவ்விமிகு மண்டபம்போல்
பாருலகில் இன்றென்ப பார்த்து. அ௰

விந்தையுள மீன்கணங்கள் மின்னிப் புடைசூழும்
சந்திரன்மா மண்டபமே தான்நிகராப்—பந்தரிட்டார்
வன்னமிகும் பல்குளப்பு வால்சேட்டு லஸ்டரெனும்
இன்னவெலாம் நன்கே யிசைத்து. அக

பூங்கமுகு நற்கரும்பு பொற்புமிகு வாழையெலாம்
பாங்குடனே நாட்டினரிப்பந்தலெல்லாம்-ஆங்கெழில்சே
மங்கலநற் றோரணமுங் கட்டினார் மற்றனைத்தும் [ர்
இங்கிதமாச் செய்தார் இனிது. அஉ

சீர்பெறுமிம் மாமணத்தின் செவ்வியா லேநாமும்
ஏர்பெறுவோ மென்றுவிரைந் தெய்தியதொத்—தார்வமொடு
நன்மணநாள் கிட்டுதலும் நண்பார் மணமைந்தன்
தன்னையழைக் கச்சென்றார் தாம். அங

பொற்றொடிநல் லாரும் புகழுடைய பல்கலையும்
கற்றுணர்நுண் கேள்விசால் காளையரும்-சிற்றிடையார்
கன்னல் மொழிபழகிக் காவில் குயில்பேசுந்
தென்னளகை யுற்றனரால் சேர்ந்து. அச

பல்லியங்கள் தாமுழங்கப் பைம்பொற் சிவிகை யினில்
சொல்லரிய மாண்போடு சோபனமாய்—நல்ல
மணமகனைத் தாமழைத்து வந்தனர்செந் தூர்க்கு
மணநடத்தச் சிந்தை மகிழ்ந்து. அரு

மணமகன்தன் அன்னைபிதா மன்தமக்கை தங்கை
குணவநுசர் உற்றோர் குறித்த—கணமுறவே
மன்றலினைக் காண மகிழ்ச்சியொடும் ஆர்வமொடும்
சென்றிருந்தார் ஆங்கே சிறந்து. அசு

சென்றுநெரு நல்குடபால் சேர்ந்த கதிரோனிம்
மன்றலினைக் காண வருவான்போல்—நன்றுறவே
தான்கீழ்த் திசைவரவே சார்ந்தநுநல் வோரையென்றோர்
வான்போற்றும் மாமறையோர் வந்து. அஎ

ஏர்பெறுமா மன்றற் கிசைந்தஉயர் பல்லியங்கள்
ஆர்கலிபோ லேயொலிக்க ஆங்கெவரும்—ஆர்வமுடன்
சேர்ந்தார் மணப்பந்தல் சிந்தைதனி லேய்யுவகை
கூர்ந்தார் அளவிலின்பம் கொண்டு. அஅ

மாமணமைந் தன்தனையும் மங்கையையும் மாமறையோர்
தாமழைத்து வாருமென்று சாற்றிடவே—பூமன்
சிதம்பரவள் ளற்குத் திருமஞ் சனந்தான்
இதம்பெறவே யாட்டி யினிது. அகூ

மாண்புருவம் பெற்ற மதனோ எனவியந்து
காண்பவரின் கண்கள் களிகூர—மாண்பா
அணிசெய் தழைத்துவந்தார் ஆடவரும் அன்னோன்
மணமண் டபத்தில் மகிழ்ந்து. கூய

தான்சேர்ந் திருந்தான் தகைசேரும் வாள்விழியாம்
மான்சேர் வதன மதியாளைக்—கான்சேரும்
நன்மஞ் சனமாட்டி நற்றூசால் நாள்மலரால்
பொன்மணிப்பூ ணாலும் புனைந்து. ௬௧

பூமகளோ தானிந்தப் பொற்கொடிவெண் தாமரைசேர்
நாமகளோ என்றுகண்டோர் நாவேத்த—மாமணஞ்செய்
மண்டபத்தில் மேன்மையொடு வந்திருக்கச் செய்தனரால்
ஒண்டொடியார் உள்ளம் உவந்து. ௬௨

சீர்பெறுநல் செல்வன் வலப்பாகம் செல்வியுவந்
தேர்பெறவே தானங் கினிதிருந்தாள்—தார்குழலார்
பொன்னனையாள் நற்குணமும் பொற்பும் பயன்பெற்ற
தென்னவுரைத் தார்பார்த் திசைந்து. ௬௩

மாமறையோர் வேதமறு மந்திரத்தா லேவளர்த்த
ஓம அனல்பெருகி யோங்கிடவே—தேமறையோர்
செய்சடங்கெல் லாஞ்செய்யச் சீரொடுநல் லாசிசொல
வையமெலாம் வாழ்த்த மகிழ்ந்து. ௬௪

மங்கலநா ணைத்தன் மணமகளின் ஒண்கழுத்தில்
செங்கையினால் கட்டினான் சீராளும்—துங்கன்
சிதம்பரவேள் நல்ல திருமணமா மைந்தன்
இதம்பெறவே பண்போ டிசைந்து. ௬௫

தையல்பா கன்குமரன் தார்வீர வாகுபிள்ளை
செய்யமணப் பெண்ணின் சிறியதந்தை-செய்யிழையின்
மென்கரத்தை நுண்ணறிவு மிக்க மணமகனின்
நன்கரத்தில் சேர்த்தான் நயந்து. ௬௬

கன்னி கொழுநன்சொற் காத்தறங்கள் செய்கவென்று
பொன்னனையார் மெய்ப்பொருளைப் போற்றிநிற்க-வன்னிதனை
ஆங்கே வலம்வந் தருந்ததியுங் காட்டினன்
ஓங்கெழிலான் மங்கைக் குவந்து. ௬௭

சிந்தைதனில் இன்பம் செறிந்தே மணமகனும்
பைந்தொடியும் பெண்கள் பலாண்டிசைப்ப—வந்த
குணமுடைய ஆடவர்கள் கூடிநின்று வாழ்த்த
மணஅறையுட் சேர்ந்தார் மகிழ்ந்து. ௬௮

நல்லவர்தம் மன்றற்கு நண்போடு வந்திருந்தோர்
எல்லவரும் சேர்ந்தங் கினிதாகச்—சொல்லரிய
மாண்புறுநல் போனகமுஞ் செய்து மகிழ்ந்திருந்தார்
காணரிய விந்தையெலாம் கண்டு. ௬௯

சீர்சேர் மணமகனுஞ் செல்வியும்நற் கோலமுடன்
ஊர்வலமும் வந்தார் உவப்பொடுவந்—தோர்களெலாம்
தம்பதிகட் கேகினர்காண் தங்கியிருந் தார்சிலநாள்
தம்பதிகள் அங்கின்பம் சார்ந்து. ௭0

தண்கடலில் ஆடித் தகைசேர் அறுமுகனைப்
பண்புறவே போற்றிப் பணிந்துதினம்—வண்புலவர்
ஆங்களித்த பாடலெலாம் அன்பொடுபெற் றுற்றனர்காண்
பாங்கோ டளகைப் பதி. ௭௧

அப்பதிவாழ் பெண்டிரும் ஆடவரும் கண்டுவக்கச்
செப்பமுடன் ஊர்கோலம் சென்றுவந்தே—அப்பதியில்
உள்ளோர் களுக்கெல்லாம் ஒப்பில் விருந்தளித்து
வள்ளியராய் வாழ்ந்திருந்தார் மற்று. ௭௨

## நாயகனிடத்து நடந்த நேர்மை.

தன்னேர்தா னாகுந் தகைமையாள் தன்னுடைய
நன்னா யகனொடுவாழ் நாள்களிலே—அன்னான்மிக்
கின்புறவே யென்றும் இசைந்திருந்த தன்மையையும்
அன்புடனே கூறிடுவேன் யான். ௩௩

பத்தாவே தெய்வமவன் பால்செயுமன் பேபத்தி
யுத்தாரம் மீறாமை யோர்விரதம்—முத்தாம்
அவன்பணியே மெய்திகழும் அன்பருளத் தேகும்
சிவன்பணியாம் என்றுசெய்வாள் தேர்ந்து. ௩௪

சீர்பரவும் தொல்கேள்விச் செம்மலது சந்நிதியில்
ஏர்பரவும் மங்கைமகிழ்ந் தின்புறுவாள்—பார்பரவும்
ஒண்கதிரோன் முன்புமலர் வுற்று விளங்குகின்ற
தண்கமலம் போன்று தழைத்து. ௩௫

மையுற்ற கண்ணாளின் மாண்பமைந்த செங்கமலக்
கையுற்றால் தித்திப்பாம் கைப்புவர்ப்பு—நொய்திற்றான்
விஞ்சையினால் செய்பவள்போல் மெல்லடிசில் பல்சுவையோ
டெஞ்சலிலா தாக்கும் இனிது. ௩௬

கற்றுணர்நுண் கேள்விக் கணவன் உறுபசியை
உற்றிடுமுன் அன்னம் உணச்செய்வாள்—பொற்றொடியாள்
அன்பாற் சிறுமகவுக் கன்னைமுகம் நோக்கித்
தன்பால் அருத்துதல்போல் தந்து. ௩௭

அன்பன் விருப்போ டருந்தும் உணவெல்லாம்
தன்பதுமக் கையால் சமைத்திடுவாள்—இன்போ
டவனருந்தி மீந்த தருந்துவாள் நாளும்
தவமலிந்த பண்பெலாம் சார்ந்து. ௩௮

கான்சேர் தயிலமிட்டுக் காந்தணிகர் செங்கரங்கள்
தான்சோர நீர்வார்ப்பள் தன்பதிக்கு—வான்சேர்
மதிமுகத்தாள் உள்ளுள் மகிழ்ந்தெப் பணியும்
பதிதனக்குச் செய்வாள் பரிந்து. ௱௯

தோற்றமிகு தன்கொழுநன் தொட்டபல கேசுவெல்ல
ஏற்றமொடு கோர்ட்டுகளுக் கேகுங்கால்—ஏற்றஉயர்
பொற்சரிகைத் தூசுதலைப் பாகையுடுப் புப்பூட்சும்
எச்சரித்து வைப்பாள் எடுத்து. ௱௰

ஆங்குப்போய் வந்தவுடன் அன்னவையெல் லாங்களைந்து
பாங்கிலவன் போடப் பரிந்தெடுத்துப்— பூங்குழலாள்
சுத்தப் படுத்தித் துகள்துடைத்துப் பெட்டிகளில்
வைத்திடுவள் நெஞ்சம் மகிழ்ந்து. ௱௧௧

மெல்லணையில் காந்தன் விழிதுயில மென்பஞ்சி
நல்லணையை மஞ்சமிசை நன்றாக—மெல்லியலாள்
தான்விரித்துப் பட்டுத் தலையணைகள் போட்டுமலர்
மேன்மிதக்கச் செய்வள் விழைந்து. ௱௧௨

நூல்படித்த நுண்மதியால் நோக்கறிந்து தன்கணவன்
கால்பிடிப்பாள் மென்கமலக் கையால்நன்—னூல்பிடித்தே
அன்னான் செவிக்கின் பளித்தங் கவன்துயின்ற
பின்னே துயில்வாள் அப் பெண். ௱௧௩

தன்பதிக்கு முன்னெழுந்து தக்கோன் தனக்குரிய
நன்பணியா வுஞ்செய்வாள் நன்றாக—அன்பார்
மனம்போல நல்லுடம்பும் மாசுறு தாள்வாள்
தினந்தோறும் இற்றொழில்கள் செய்து. ௱௧௪

மன்கா ரியம்நடத்தும் மாணமைச்சன் போல்தலைவன்
தன்கா ரியமெல்லாம் தான்செய்வாள்—நன்சார்பே
தான்மொழிவாள் மிக்க தகவாய தேர்புரிவாள்
தேன்மொழியாள் சிந்தை தெளிந்து. ௱௧௫

மொய்யிருளைப் போக்கி முனிகதிர்போல் மூடமெனும்
பொய்யிருளைப் போக்கிடும்நல் புத்தியுளாள்—மெய்யுரையே
சாற்றுவாள் எஞ்ஞான்றும் தன்னா யகன்பதமே
போற்றுவாள் அன்பே புரிந்து. ௱௧௬

மின்னணிகள் மென்துகில்கள் மின்னாள் கணவனுனக்
கென்னவகை வேண்டும் எனவினவில்—நின்னுடைய
சிந்தைக் கிசைந்ததுவே சீரா மெனக்கென்று
பைந்தொடியும் சொல்வாள் பதில். ௱௧௭

எப்பொருளும் எப்பொழுதும் இல்லமதில் இல்லையெனாள்
கற்பகப்பூங் கொம்போர் கணவியென—இப்புவியில்
மன்னும் சிதம்பரமா வள்ளல் தனக்கிசைந்த
தென்னும் படியே யிவள். ௱௧௮

எங்கேனும் தன்கொழுநன் ஏகியொரு போதுமறந்
தங்கே யிருந்தக்கால் ஆற்றாளே—செங்கதிர்தான்
இல்லாச் செழுங்கமலம் என்ன முகம்வாடி
நல்லாள் தளர்வாள் நலிந்து. ௱௧௯

ஆங்கவன்தன் நல்வரவு கண்டால் அணிமதிகண்
டோங்குகடல் போல்உவகை யோங்குவாள்—பூங்கழல்கள்
போற்றுவாள் இன்பப் புணரியால் வெம்மையினை
ஆற்றுவாள் அன்னாள் அகத்து. ௱௨௰

அன்பணிவண் இன்பம் அணுவளவுற் ருல்சுவர்க்க
இன்பநனி யுற்றிடுவாள் இங்கவன்பால்—துன்பம்
அணுவளவுற் ருல்நரகத் தார்துன்ப மெல்லாம்
நணுகியதென் றுள்மெலிவாள் நைந்து. ௱உக

அன்னாள் கணவன்போல் அன்போடு தன்மனையை
மன்னிவாழ்ந் தாரறியேன் மாசற்றேன்—நன்னுதலை
யேதேனுங் கூறிடினும் இன்சொலாக் கொண்டிடுவள்
கோதே யிலாதாள் குளிர்ந்து. ௱உஉ

ஆகமே பன்மையன்றி ஆன்மா இரண்டில்லை
ஏகமே யாமென்னும் இவ்வாய்மை—சோகமின்றி
இன்னவர்கள் தம்பால் இனிதறிந்திங் கெல்லாரும்
நன்மைபெற லாமே நயந்து. ௱உங

அன்னை சகோதரிகள் அன்பார் உறவினர்கள்
மன்னும் சகிமார்கள் மாதவத்தர்—என்னும்
இவர்களையும் தன்தலைவன் ஏற்களனில் ஏற்பள்
தவிர்களனில் நிற்பள் தவிர்த்து. ௱உச

மன்னுயிர்கள் போற்றும் மகராசி நாயகனைத்
தன்னுயிரென் றேம்புவாள் சந்ததமும்—தன்னுயிரும்
அன்னான் உயிர்முன் அணுவென்றே எண்ணுவாள்
என்னே அறிஞள் இவள். ௱உரு

தெய்வீக முற்ற திருவள் ளுவர்க்கமைந்த
மைவிரும்புங் கண்மனைவி மானவே—மெய்வேள்
சிதம்பரம்பிள் ளைக்கில்லாள் சேர்ந்தாள்இங் கென்பர்
இதம்பெறவே யாரும் இனிது. ௱உசு

## மாமன் மாமி முதலியோர்க்கு நடந்த நேர்மை.

பூமிமுழு தும்வியந்து போற்றவே தன்மாமன்
மாமி இளங்கொழுந்தர் மைத்துனிபால்—நேமமுடன்
இன்னாள் நடந்தவகை யின்பமொடு கூறுவேன்
என்னால் இயலுமள விங்கு. ௱உ௭

தன்னுடைய நாயகனின் தந்தையாம் மாதுலனைத்
தன்னுடைய தந்தையெனத் தன்னுளத்தில்—உன்னிநிதம்
செய்பணியா வுஞ்செய்வாள் சீர்சேர்தன் மாமியுடன்
தெய்வஅடி யார்போல் திகழ்ந்து. ௱உ௮

அன்பன்தன் அன்னைதனை தன்னையெனக்கொண்டுளத்தில்
இன்பமொடு செய்திடுவாள் எப்பணியும்—அன்போ
டவள்சொற் கடவாள் அகிலமதில் மாமிக்
கிவளல்லால் நன்மருகி யேது. ௱உ௯

இல்லமதில் செய்தொழில்க ளெல்லாம் இவள்மாமி
சொல்லுமுனஞ் செய்திடுவாள் சோர்வின்றி—மெல்லியலாள்
மெய்வருந்து மென்றிரங்கி மேவியவள் செய்யலுறின்
செய்யவிடாள் மின்னாள் செறிந்து. ௱௩௰

பொன்மா தனையாளைப் புண்ணியமென் செய்தேனோ.
நன்மா மருகியா நான்பெறவே—என்மா
மகராசி யிம்மனைக்கு வந்ததுதொட் டிங்கே
தகவாய தெம்மாண்புந் தான். ௱௩௧

என்றே மகிழ்ந்துரைப்பள் இன்பமொடு மாமியுந்தான்
நன்றோர் வடிவான நங்கையினை—என்றுமே
அந்நகர்வாழ் ஆயிழையார் அன்னையெனக் கொண்டவளின்
தன்மையினைப் போற்றுவரே சார்ந்து. ௱௩௨

தேனேர் மொழியாள் திருமகிழ்நன் தன்தங்கை
மானேர் விழியாள் மலர்க்குழலாள்—வானூர்
புகழுடையாள் கற்பணிபூண் பொற்கொடியா ளைத்தன்
மகளென்றே காப்பள் வளர்த்து. ௱௩௩

தன்தங்கை யானசிவ காமியெனுந் தையலினிம்
மின்தன்னை மிக்க விழைவுடனே—நன்கெண்ணித்
தானருமை யோடும் தகவோடும் பேணிடுவள்
நானறிவேன் இங்கிதெலாம் நன்கு. ௱௩௪

சுந்தரஞ்சேர் கேள்வன் துணைவரையும் தன்னுடைய
மைந்தரென்றே கொண்டு வளர்த்திடுவள்—சிந்தைமகிழ்ந்
தன்னார் விரும்பும் அணியாடை யாதியன
பன்னும் முனரளிப்பள் பார்த்து. ௱௩௫

தன்னுடைய வீட்டிலுளார் தம்முள்ளே மாறுபடின்
அன்னையென நின்றவரை யாதரிப்பள்—மன்னும்
இவளே மனைவி இவள்கொழுநன் செய்த
தவமே தவம்இத் தலத்து. ௱௩௬

## உறவினரை உபசரித்தமை.

தன்னுடைய வீடுற்றுத் தங்கி யகமகிழ்ந்து
துன்னும் உறவினரைத் தோகைதான்—பன்னாளும்
நண்பா யுபசரித்த நன்மையையுங் கூறுவேன்
பண்போடும் இங்கே பரிந்து. ௱௩௭

தன்கேள்வன் முன்னுதித்த தார்குழலாள்வள்ளியம்மை
தன்கேள்வ னோடங்குச் சார்ந்தக்கால்—நன்கே
அவருடைதாள் போற்றி அவரளித்த நீறு
தவமுடையாள் நெற்றி தரித்து. ௱௩௮

அன்பா முகமனுரைத் தன்னவர்க்குத் தக்கவிருந்
தின்போடு செய்வாள் இனிதாக—மன்புவியில்
புத்தமுதம் போல்வாரோர் போதுபோல் பல்போதும்
சித்தமொரே வாருச் சிறந்து. ௱௩௯

தன்னா யகன்தன் சகோதரிதன் னைத்தனக்கு
முன்னே யுதித்தாளின் மும்மடங்கா—இன்னாள்மிக்
கன்புசெய்வாள் அன்னாட் ககம்போல் நடந்தேநல்
இன்புசெய்வாள் நாளும் இசைந்து. ௱௪௰

அன்னாள்தன் கேள்வனைத்தன் அண்ணனென உட்கொண்டு
பன்னாளும் செய்திடுவள் பண்பெல்லாம்—அன்னான்
உணவுகொளும் முன்னர் உணவுகொளாள் மாலை
நணுகிடினுங் காத்திருப்பள் நன்கு. ௱௪௧

புங்கமுட னேநற் புகழா விளங்குகின்ற
தங்குடிச்சுற் றத்தார்க்குச் சந்ததமும்—அங்கவர்தம்
சிந்தை யுவகையுறுஞ் சீரே புரிந்திடுவாள்
எந்த இடத்தும் இவள். ௱௪௨

தன்மகிழ்நன் தாதை சகோதரியின் மைந்தனென்றே
என்னையுணா யாள்சேட்போ ரெல்லோர்க்கும்—தன்னநுசன்
என்றே மொழிவளதற் கெண்மடங்கன் போடுமின்பா
நன்றே புரிவள் நலாள். ௱௪௩

அன்னாளும் யானும் அரியஓர் தாய்வயிற்றில்
முன்னாள் உதித்தோமோ மூதுலகில்—என்னவோ
அப்படியோர் பண்புள்ள அன்பார் சகோதரியை
இப்படியில் காணேன் இசைந்து. ௱௪௪

தன்னைப் பயந்தாட்குத் தங்கையெனக் கூறுள்காண்
என்னைப் பயந்தாளை எஞ்ஞான்றும்—அன்னை [த்
எனக்கிவளென் றேசொல்வாள் எல்லோர்க்குங் கற்பை
தனக்கணியாக் கொண்டஇவள் தான். ௱௪௫

பெண்மகவில் லாததொரு பெற்றியைமற் றெண்ணாதிவ்
வொண்மகளே தன்மகளென் றுன்னிநிதம்—வண்மை
யுடையாள் குணத்தால் உவந்தேயென் அன்னை
அடைவாள்பே ரின்பம் அடுத்து. ௱௪௬

இன்னவளின் அன்னை இனிய சகோதரிகள்
பின்னுளபல் உற்றாரிற் பேணிமிக—நன்மையுற
நண்பா யுபசரிப்பள் நாயகன துற்றாரை
ஒண்பாவை யன்னாள் உவந்து. ௱௪௭

மங்கலஞ்சேர் தன்மனையில் வாகாக வேபுரியும்
மங்கலநல் செய்கைதொறும் மாண்பாக—அங்கெவர்க்கு
தானே முகமனொடு சால்புறயா வும்புரிவாள் [ந்
பானேர் மொழியாள் பரிந்து. ௱௪௮

ஒண்பொருள்மிக் குள்ளோர் வறியோரென் றுன்னாது
பண்புறுமுற் றாரையெலாம் பான்மையொடும்-நண்பொடுமிக்
கன்போ டுபசரிப்பள் ஆன்றோர்தந் தன்மைபோல்
மென்பாவை நன்கு விழைந்து. ௱௪௯

நல்லாளை நாயகியாக் கொண்டஇவள் நாயகனே
எல்லாத் தவமும் இயற்றினனால்—இல்வாழ்
விவற்கே தகுமென்பார் ஈங்குளோர் யாரும்
தவத்தாள் குணம்வியந்து தான். ௱௫௰

நல்லாள் எனும்பேரிந் நங்கையனார்க் கேற்குமன்றி
எல்லா மடவார்க்கும் ஏற்குமோ—தொல்புவியோர்
ஐம்பொனென்றால் மற்றெவைக்கும் ஆமோ அவிரொளிசேர்
பைம்பொன்னின் மிக்குயர்ந்த பண்பு. ௫௧

## நாயகனது நண்பர்களை உபசரித்தமை.

உத்தமிதன் கேள்வற் குறுநட்பா மாடவர்தன்
சித்தமகிழ் நட்பாந் தெரிவையரென்—றித்தகையோர்
தம்பால் நடந்தஉயர் தன்மையையுங் கூறுவேன்
அன்பாத் தெரிந்தவணம் யான். ௫௨

மெய்நட்பே மிக்கோர் விரும்பி யினிதாகச்
செய்நட்பே மிக்கோன் சிதம்பரத்தை—மொய்நட்போர்
ஆங்கவனுள் என்பாம் அமிழ்துண்போர் அன்னவனை
நீங்குவரோ நீங்கார் நிதம். ௫௩

ஆங்கவர்கட் கெல்லாம்நல் அன்னையினும் மேலாகப்
பூங்கொடிநல் லன்பே புரிந்துநிதம்—பாங்குடனே
இன்னமுதம் மாண்போ டினிதருந்தச் செய்குவாள்
நனமுகமன் கூறி நயந்து. ௫௪

சித்திபுரி வார்க்குஞ் சிறந்த துறவிகட்கும்
உத்தியோ கத்தர்க்கும் உற்றோர்க்கும்—மற்றோர்க்கும்
தன்கேள்வ னுக்குந் தருவாள் விருப்பறிந்து
நன்கே யுணவு நலாள். ௫௫

தன்மனையி லேயருந்தாச் சாதியோர்க் கந்தணர்தம்
நன்மனையி லேமிகவும் நன்காக—இன்னமுதம்
நெய்பால் தயிருடனே நித்தம் இனிதருந்தச்
செய்வாள் குறிப்புத் தெரிந்து. ௫௬

தன்கேள்வன் இல்லாச் சமயமவர் வந்திடினும்
நன்கே யுபசரித்தந் நண்பினரை--மென்பாவை
வேலையா ளர்களால் வேண்டுவசெய் விப்பள்
சாலஅவர் உள்மகிழத் தான். ௱௫௭

எத்தனைநாள் அன்னோர் இருந்திடினுந் தன்வீட்டில்
புத்தியுளாள் அன்பே புரிந்துமிகச்—சித்தமகிழ்ந்
தோர்நாள் எனவே யுபசரிப்பள் நித்தமுமிப்
பார்மீ தெவர்க்குளதிப் பண்பு. ௱௫௮

பொன்னனையாள் கற்பும் புகழுஞ்செய் புண்ணியமும்
அன்னவர்கள் கண்டே யதிவியப்புற்—றென்னநம
தில்வாழ்வோர் வாழ்வோ இனிதாஞ் சிதம்பரத்தின்
நல்வாழ்வே வாழ்வென்பர் நன்கு. ௱௫௯

இம்மகள்மாண் பெல்லாம் இனியனவென் றுள்ளுவந்து
தம்மனைமார்க் கன்னோர்போய்ச் சாற்றிடவே—அம்மகளிர்
தாங்கேட் டகமகிழ்ந்தித் தையலினைக் காணஇவள்
பாங்கே வருவார் பரிந்து. ௱௬௰

பொய்வடிவே யாமருங்குல் பூவைமார் போதலும்நன்
மெய்வடிவே யாளுள் விழைந்தெதிர்போய்--வைவடிவேல்
கண்ணார் தமக்குக் கனிவாய்ப் பலமுகமன்
பண்ணார் மொழியால் பகர்ந்து. ௱௬௧

அன்னநடை யாரை யழைத்துவந்தே யந்நடையில்
சின்னநடை யாள்நற் செழுமதுரம்—மன்னும்
கனிவகைசிற் றுண்டிகள்பால் கற்புடையன் னோர்கள்
நனியருந்தச் செய்வாள் நயந்து. ௱௬௨

தண்பனிநீர் மென்கலவைச் சாந்தொடுதாம் பூலமுதல்
நண்புறுமா மின்னார்க்கு நல்குவாள்—நண்புரைகள்
சீர்சேருங் கல்வித் திறஞ்சேர்ந்தே பேசுவளவ்
வேர்சேர்மின் னாரோ டினிது. ௩௩

நல்லறத்தின் மாண்போடிந் நானிலத்து நின்றொளிரும்
இல்லறத்தின் மாண்பே யினிதாகத்—தொல்லறத்தின்
நான்முறையே கூறுவள்அந் நூற்பொருளை நன்கேயத்
தேன்மொழியார் கொள்ளத் தெளித்து. ௩௪

சின்னேரம் அன்னார் சிலர்நன் மொழியாள்பால்
நன்னேர மாவசித்து நன்குவந்து—பொன்னேர்
நலஞ்சேர்வா ளின்தக்க நண்புபெற்றுத் தத்தம்
இலஞ்சேர்வார் நாளும் இனிது. ௩௫

அப்பெண்கள் செல்ல அயலூரி னின்றுவந்த
செப்பமுள பூவையர்க்குத் தேன்மொழியாள்—ஒப்பில்
விருந்துசெய்வள் அன்னார் விருப்பமொடு கொள்ளும்
மருந்தெனவே யுள்ளம் மகிழ்ந்து. ௩௬

தனக்கிளைய மங்கையெலாம் தன்தங்கை மற்றோர்
தனக்குமுனம் வந்த தமக்கை—யெனக்கருதி
நட்புச்செய் தன்னார்க்கு நன்மைநிதம் செய்திடுவள்
கொட்பிலா மெய்யன்பு கொண்டு. ௩௭

நால்வருணத் தில்சிறந்திந் நானிலத்து நிற்கின்ற
மேல்வருணத் தில்பிறந்த மின்னாருஞ்—சேல்விழியாள்
நண்பால் குணத்தால் நலத்தால் சகோதரத்தின்
பண்பெல்லாஞ் செய்வர் பரிந்து. ௩௮

இந்நங்கை மார்தம்மூர்க் கேகுங்கால் ஏந்திழையாள்
உந்நண்பை யான்மறவேன் ஓர்போதும்—இந்நகர்க்குச்
சின்னாளைக் கோர்தடவை சேயிழையீர் வந்துசெல்வீர்
பன்னாளும் என்பள் பணிந்து. ௱சுசு

தம்பதிகள் சென்றதுமத் தையலர்கள் இவ்வரியள்
நன்புகழே சொல்பபல நங்கையர்க்கும்—கொம்பனையார்
நல்லாளின் செய்கையெலாம் நாளும் பயில்வரிவண்
பல்லோரும் உள்மகிழப் பார்த்து. ௱எ௰

வள்ளியம்மை நல்ல மகாராசி நன்னடைவாய்ந்
தொள்ளியரா வார்அவள்தண் புற்றபெண்கள்—வெள்ளியதாந்
தண்மதியால் அஃதனுயர் தன்மையைக் கொள்கின்ற
ஒண்மணிபோல் உள்ளம் உயர்ந்து. ௱எக

சாதுக்களை உபசரித்த நேர்மை.

சரியைகிரி யையோகம் சாற்றரிய ஞானம்
அருமையொடு பற்றிநிற்கும் ஆன்றோர்க்—குரிமையொடு
நந்நல்லாள் செய்செயலும்நான் தெரிந்தவா றுரைப்பேன்
நந்நல்லார் கொள்ளஅவை நன்கு. . ௱எ௨

பாசந் தனையகற்றிப் பல்வினைதீர்த் தாளுமெம
தீசன் தனைப்பரவி யின்புற்றே—மாசகன்ற
உள்ளம் உறுமடியார் உற்றால்தன் நாயகனோ
டுள்ளருமாண் புள்ளாள் உவந்து. ௱எ௩

சென்றெதிர்போய் அன்னார் திருவடியில் வீழ்ந்திறைஞ்சி
இன்றடிகள் இங்குறுஞ்சீர் எய்தினோம்--என்றுபகர்ந்
தன்னவர்க்கு வேண்டும் அரும்பணிகள் செய்துபின்னர்
அன்னமுணச் செய்திடுவாள் ஆங்கு. ௱எச

மெய்ப்பொருளைச் சிந்தித்து மேதினியைத் தாங்குமொரு
சிற்பொருளே யஃதென் றுதேர்ந் துணர்ந்திங்-கெப்பொருளும்
பற்றிடினும் எள்ளளவும் பற்றுமெய்ஞ் ஞானிகளும்
உற்றுறைவர் தென்னளகை யூர். ௱௭௫

தன்கேள்வன் அப்பெரியர் தாள்மலரைத் தன்தலைவைத்
தன்போ டழைத்துவர ஆயிழையும்—இன்போடு
முன்செய் தவமோஇம் முத்தர் தமைக்காண
என்செய்தோம் புண்ணியநாம் இங்கு. ௱௭௬

என் றுநினைந் தன்னார் எதிர்சென் றடிதொழுது
நின் றுமொழி வாள்மகிழ்ந்து நீவிர்இங்கே—இன்றுவர
யாஞ்செய் தவமெதுவோ அல்லதெங்கள் நன்மரபோர்
தாஞ்செய் தவமெதுவோ தான். ௱௭௭

இம்மனைமுன் செய்த எழில்ஆர் தவமெதுவோ
செம்மையுள யாங்கள் தெரிந்திலோம்—இம்மையிலே
பெற்றனம்நும் நல்வரவால் பேறெல்லாம் பேரின்பம்
உற்றனம்எம் நன்மை யுயர்ந்து. ௱௭௮

ஆங்கவர்நல் லாசிகள்பெற் றன்பனொடு நெஞ்சுவந்தத்
தீங்கறுநன் மேலோர்க்குச் செய்பணிகள்—பாங்குறமிக்
கன்போடுஞ் செய்தே யமுதருந்தச் செய்வள்நிதம்
இன்போடின் சொல்லோ டினிது. ௱௭௯

குலத்திலுயர்ந் தார்இழிந்தார்என் றுகொள்ளா தன்பின்
நலத்திலுயர்ந் தாள்உவகை நண்ணினளாய்—இலத்தமைந்து
செய்பணியா வுஞ்செய்வள் சீரியர்தந் நீர்மையெலாம்
எய்திநனி சிந்தை யிசைந்து. ௱௮௰

மும்மலமாம் அல்லை முனிந்தோட்டி மூதுலகில்
நன்மையெனுந் தேசை நனிபரப்பிச்—செம்மையொடு
நின்றுணர்த்தும் மெய்ப்பொருளை நீள்உலகில் யாவர்க்கும்
இன்றுணர்த்தும் நற்றொழிலை யேற்று. ௱அக

எற்குருகி ஞானம் இனிதருளி யென்னுடைய
நற்குருவாய் வந்தவள்ளி நாயகமாஞ்—சிற்குருவை
இம்மகள் தான் கண்டால் இருநிதிபெற் றோருளம்போல்
தன்மனத்தில் மிக்கின்பம் சார்ந்து. ௱அஉ

என்றவப்பே றுற்றனன்யான் என்றெதிருற் றேவணங்
நின்றுபல நன்மொழிகள் நேமமொடு—நன்றுறவே [கி
சாற்றி அவனுடைய தண்ணருள்பெற் றின்புறுவள்
போற்றி அவன்நற் புகழ். ௱அங

அன்னவனுக் குள்ளன்போ டாம்பணிகள் யாவுஞ்செய்
தின்னமுது மாண்போ டினிதருந்த—நன்முகமன்
பல்காலுங் கூறிடுவள் பண்போ டவன்மகிழப்
பல்கால முந்தான் பணிந்து. ௱அச

போனகமுண் டப்பெரியோன் புண்ணியத்தாள் கேள்வனொடு
ஞானமுள பல்லோர் நடுவிருந்து—கோனெனவே
சொல்லரிய மாண்சேர் சுருதிப் பொருளுரைக்க
மெல்லியலுங் கேட்கும் விழைந்து. ௱அரு

தன்னா யகன்போலுந் தான்கேட் டகமகிழ்ந்திம்
மின்னாள்நல் ஞானம் மிகவுறுவள்—பன்னாளும்
இற்றொழிலுங் கேள்வற் கிசைதொழிலும் நற்றவருக்
குற்றபணி யுஞ்செய் துவந்து. ௱அசு

யாதும் வியவா அருந்தவத்தோ ரும்தகவாள்
கோதில் மதிவியந்தே கூறுவர்அம்—மாதவத்தோர்
ஆங்குச் சிலநாள் அமர்ந்திருந்து பின்வேறூர்
பாங்குசெலும் போது பணிந்து. ௩௭

அன்னவர்தாள் போற்றி யடிகள்மீர் நீவிரெங்கட்
கின்னருள்செய் தின்னும் எழுந்தருளி—நன்மையதா
யாங்களுய்பச் செய்வீரென் றன்பனொடு சேர்ந்துரைக்கும்
பூங்கொடிமிக் கன்பே புரிந்து. ௩௮

## ஏழைகளுக்கு அன்னமிடுதல்.

துதிசொலிவந் தெம்பசிக்குச் சோறிடுதாய் என்னும்
அதிதிகளாம் ஏழைகட்கும் யார்க்கும்—மதியுயர்வாள்
இன்னருள்செய் தன்னம் இடும்இயல்பும் கூறுவேன்
என்னுளத்தில் இன்பம் இசைந்து. ௩௯

தாயே மகராசி சற்குணியே மிக்கேழை
யாமேயாங் களுக்கிடுவாய் அன்னமெனத்—தூயாளின்
சீர்மிகவே போற்றித் தினமுமவர் கூறுமுரை
ஆர்கடல்போல் கேட்கும் அவண். ௪௰

ஒங்குபசி யால்சேய் உணங்கியழும் ஒண்குறல்காண்
பாங்கிலுறை தாய்செவியில் பட்டிடல்போல்—பூங்குழலாள்
தன்செவியில் உற்றிடலும் தண்தமிழை யொத்தஅரும்
இன்சொலினுள் அன்போ டெழுந்து. ௪௧

பொற்கமலந் தன்னிலதி பொற்பா முகமலர்ந்தோர்
நற்கமலந் தன்னில் நனிகொணர்ந்தே—அற்கமலம்
அன்னவவர் தம்முகமும் ஆங்கிலங்கச் செய்திடுவாள்
இன்னமுதம் அன்னருக் கீந்து. ௪௨

அந்திவந்து நீள்நேரம் ஆனபினும் ஏழையர்தாம்
வந்துவந்து கேட்டிடினும் மாதுதான்—புந்திமகிழ்ந்
தாங்கவரை யொன்றும் அழன்றுகூ றாதிடுவாள்
பாங்குடனே யன்னம் பரிந்து. ௱௯௩

அன்னமதை யேற்கா அருமறையோ ராதியர்க்கு
மின்னொளிவெண் முத்தனைய மெல்லரிசி—அன்னவர்கை
நற்பாத் திரத்தே நனிசொரிவாள் கொண்டுவந்து
சற்பாத் திரமானாள் தான். ௱௯௪

தன்மனையில் நின்று சமையல் தொழில்புரியும்
மென்மகளிர் மற்றுமுள வேலைசெய்வோர்—நன்மையுற
அன்னார் பசியை அவர்முகத்தே நோக்கியமிழ்
தன்னாள் இடுவாள் அமுது. ௱௯௫

மாசற்றாள் தன்னின் மகிழ்நன்பால் நித்தமுறும்
கேசுக்கா ரர்க்குக் கிருபையொடு—தேசுற்
றகமகிழ்ந்து தாகம் அகன்றிடநீர் ஈவள்
முகமலர்ந்து கேட்கும் முனர். ௱௯௬

அன்னவரில் இன்மையுற்ற யாரேனும் என்றேனும்
இன்னமுது கொள்ளக்கா சில்லாமல்-என்னசெய்வோம்
என்றுமனத் தெண்ணினவர் எண்ணமறிந் தேயிரங்கி
அன்றருந்தச் செய்வாள் அமுது. ௱௯௭

முன்னிருந்தோர் தம்மிலும்இம் மூதுலகில்வாழ்வெய்தி
இன்றிருப்போர் தம்மிலும்இவ்வேந்திழைபோல்--அன்னமிடும்
பெண்களையாம் கண்டறியோம் கேட்டறியோம் பெண்ணரசி
ஒண்குணந்தான் யார்க்கிங் குறும். ௱௯௮

என்றுபுகழ்ந் தெல்லாரும் இன்னாள் புகழ்தனையே
சென்றஇட மெல்லாஞ் சிறந்துரைப்பர்—என்றுமே
அன்னமிடும் பேருத் தறப்பேற்றில் வேறுபே
றென்னவுள தம்மா இவண். ௲௬௯

## பொது நற்குணம்.

மன்மதியாம் ஆனனத்து மானினத்தின் நாட்டமுளாள்
தன்மதியா லேயின்னுஞ் சார்ந்தகுணம்—என்மதியால்
இன்பாக வேதெரிந்த வாறே யியம்பிடுவேன்
அன்பாக வேசிலபா வால். ௨௰

சற்குணமே பொற்கலமாத் தானணிந்த வள்ளியம்மை
நற்குணமாண் பெல்லாம் நவில்தரமோ–முக்குணத்தில்
தூய்தாம் முதற்குணத்தாள் சொல்லுமக ராசிபெற்ற
தாய்தான்மற் றெவ்வுயிர்க்குந் தான். ௨௰௧

மங்கையின்நல் லுள்ளம் வளர் அருளே செய்யுமிவள்
செங்கனிவாய் இன்சொல்லே செப்பும்காண்-இங்கெவர்
நன்றே புரியுமிவள் நற்கரங்கள் மற்றிவையிங் [க்கும்
கொன்றேயுங் கண்டறியா வுற்று. ௨௰௨

கலைமகளே யாவள் கருணைநிறை கல்வியினில்
நிலமகளே யேபொறையில் நேர்வாள்—நலமார்
திருமகளே யாவள் திருவில் வசிட்டன்
அருமனையே யாவள்கற் பால். ௨௰௩

சீர்சேர் றூ லேபயில்வாள் சீரியதே உள்விழைவாள்
ஓர்போதும் வீண்போதாய் ஓடவிடாள்—பார்புகழும்
தன்கேள்வற் கின்பம் தரும்செயலே செய்திடுவாள்
இன்கேள்வி யேகேட்பாள் இங்கு. ௨௰௪

நந்தாயு மானவர்இ ராமலிங்க சாமிமுறை
கந்தனது சீர்புகலுங் காவடிநல்—சிந்துமுதல்
பாடென்றால் தன்கொழுநன் பாடுவாள் ஒவ்வொருபண்
ணோடும் வணங்கி யுவந்து. உ௱௫

தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்ணென்று-முற்காலம்
வள்ளுவர்தாஞ் சொல்வாய்மை மன்னுமாண் பிம்மகளின்
ஒள்ளியதாஞ் சீர்க்கே யுறும். உ௱௬

சென்னைதிரு வொற்றியூர் சீர்சேர் பலவளங்கள்
மன்னுசே ரன்பதிகள் மற்றுமுள—நன்மைசால்
நற்றலங்க ளெல்லாம் நனிமேவி நன்குற்றிப்
பெற்றனள்காண் நல்ல பெயர். உ௱௭

இன்னவளின் மாண்புரைக்க எங்கம்பர் தாசரன்றிப்
பின்னவரில் யார்அருகர் பேசுங்கால்—நங்கை
இசைபடர்ந்த ஆழிசூழ் இவ்வுலகி லேயெண்
திசைபடர்ந்த தன்றே சிறந்து. உ௱௮

ஐயிருநூ றோடறுபத் தொன்பதாம் ஆண்டினிலிச்
செய்யிழைதான் உற்றாள் திருமணமே—ஐயிரண்ட
தாகும்நூ றோடெழுபத் தாறாண் டதுதனிலே
சேர்கக் கடலுள்ளே தோய்ந்து. உ௱௯

பூவுலகுள் ளோரெவரும் புண்ணியமுந் தாம்வருந்த
மூவுலகில் மிக்க மொழியமரர்—மாவுலகம்
சேர்ந்தாளிந் நன்மாது சீர்சேர் விதிவலிமை
சார்ந்தே மகிழ்வோடு தான். உ௱௰

கங்கையைமுன் சேர்ந்திழந்த காவலனுஞ் சந்தனுபோல்
நங்கையினைச் சேர்ந்திழந்த நாயகனும்—இங்கிவளின்
மன்னெழிலும் மாண்பும் மதியும் நினைந்தழலும்
தன்னுளமும் மெய்யும் தளர்ந்து. உகக

ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும்
மாண்டார் வராரென்னும் வாய்மையுணர்ந்—தாண்டகைதன்
அன்னைபிதா சுற்றத்தார் ஆன்றபுலவர்வேண்ட
இன்னொருபெண் கொள்ள இசைந்து. உகஉ

தன்மனைவி சுற்றத்தில் தக்கவொரு பெண்ணைத்தன்
நன்மனைவி யாக நனிமணந்து—பொன்மகள்நேர்
இம்மா தொடுநின் றிசைபெருக்கி வாழ்கின்றான்
இம்மா நிலத்தே யினிது. உகங

மன்புவியில் இம்மாதும் வள்ளியம்மை பெற்றுள்ள [ருள்கள்
மன்புகழெல் லாம்கொண்டு வாழ்கதொன் னூல்—நன்பொ
கற்றோன் சிதம்பரமன் கல்வியுறும் புத்திரப்பே
றுற்றோங்கி வாழ்க உவந்து. உகச

முந்நூல் களும்வாழ்க மூதறிவில் வேன்புகன்ற
இந்நூலும் வாழ்க இனிதாக—இந்நூலை
அன்போடு கற்போரும் கேட்போரும் அந்தமிலா
தின்போடு வாழ்க இவண். உகரு

நல்லறமும் வாழ்க நவையறவே நானிலத்தோர்
இல்லறமும் வாழ்க இனிதாகச்—சொல்லரிய
மேலவரும் வாழ்கஅவர் மெய்ந்நெறியும் வாழ்கஇவண்
சீலமதும் வாழ்க சிறந்து. உகசு

நூல் முற்றிற்று.

## நூற்புறம்.

### ஸ்ரீமாந் வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்கள் சிறையிலிருந்து எழுதியனுப்பிய தமது சரித்திரக் குறிப்பில் கண்ட பா.

"சேந்தூர் நின்று சீரெலாம் திரட்டிச்
சொந்தமாக் கொண்ட சுப்பிர மணியன்
மகளாப் பிறந்து மாண்பெலாம் கொண்ட
மகராசி யென்னும் வள்ளி யம்மையை
நன்மனை யறங்களை நன்கு வளர்த்திட
முன்மனை யாக மொய்ம்பொடு கொண்டேன்.
சேந்தூர் மணந்ததும் சிறப்புடன் எனதுதேன்
அழகையூர் அடைந்ததும் அதன்பின் நிகழ்ந்ததும்
என்னுடை மைத்துனன் இயற்றிய வெண்பா
நன்னூல் தன்னில் நன்றாக் காணலாம். ௰

உதவியைக் கொன்றார் உய்யார் என்றும்
இதமுடை யவரை யியம்பல்நன் றென்றும்
முன்னோர் உரைத்ததால் மொழிவேன் அவள்குணம்
பின்னோர் அவற்றைப் பேணுதற் பொருட்டே.
எனதொரு வடிவமும் எனக்குறு தொண்டுமே
கனவினும் நனவினும் கண்டவள் நின்றனள்.
என்னைப் பெற்றோர் என்னொடு பிறந்தோர்
என்னை நட்டினோர் யாவரும் தன்னுடை
உயிரெனக் கருதி ஊழியம் புரிந்த
செயிரிலா மனத்தாள் திருமக ளனையாள். ௨௰

வள்ளுவர் குறளை வளனுறப் படித்துக்
கொள்ளும் விதத்தில் கூறுவள் உரையுடன்.
அறிவே வடிவாய் அமைந்திவண் நின்று
செறிபேர் இன்பம் சிறக்க அளிக்கும்
வள்ளிநா யகமொடும் மற்றும் மறைகளைத்
தெள்ளிய உணர்ந்த திறத்தின ரொடும்நான்
பிரம நிலையினைப் பேசி விசாரணை
புரியுங் காலைப் புறத்தில் நின்று
சொன்னவை யெல்லாம் துரிசறக் கேட்டுப்
பின்னவை யென்னொடு பெட்புற வினவுவள். ௯ம

பலருட னிருந்து பருகும் பொழுதப்
பலரும் அறியாப் பதத்திலும் மறைத்தும்
நானும் வள்ளி நாயகமும் நவில்வன
தானும் உணர்ந்து தனக்குள் நகுவள்.
சிவத்தை யுணர்ந்த தேசிகன் ஒருவனென்
தவத்தால் என்இலம் தங்கப் பெற்றேன்.
ஊனக் கண்ணினை யொழித்தவன் நின்றதால்
தானக் குறையினைத் தவிர்த்திட வூட்டினள்.
குலத்தில் அன்னோன் குறைந்தவன் என்றென்
தலத்தினில் உள்ளோர் சாற்றினர் குற்றம். சம

கேட்டதும் அவ்வுரை கிளர்தே சிகனை
ஓட்டிடக் கருதியான் உரமில் லாமையால்
அவளிடத் துரைக்க அடுக்களை சென்றேன்.
அவளெனைக் கண்டதும் அறைந்திடும் முன்னர்யான்
“எல்லாம் உணர்ந்த என்னுயிர் நாத!
‘எல்லாம் கடவுளா இருக்கக் கண்டும்
உருவம் முதலிய ஒன்றிலும் பேதம்

மருவுதல் இலாமை மலைபோல் கண்டும்
கற்பனை யாகக் காணும் குலத்தின்
சொற்பிழை கொளல்'எனச் சொல்லிய தூய!
துறந்தவர் தம்மையும் தொடருமோ குலம்இவண்?
மறந்தும் மொழியினை மதியா தொழிப்போம்.
அன்றியும் இஃதெலாம் ஆதியில் நினைந்தே
ஒன்றிடா தமர்த்தி ஊழியம் புரிந்திடின்
பிழையெனார் உலகப் பேதைமை யுணர்ந்தோர்.
பழமைபா ராட்டிப் பகுத்துப் பிரித்தல்
நன்றோ? நல்லோய்! நவிலுவார் நவிலுக:
என்றும் போற்பணி இயற்றுவோம்." என்றனள்.
திருமந் திரநகர் சேர்ந்தபின் என்குல
குருவந் தனன்எனக் கூறி யவற்கும்
தட்சணை நிதியைத் தந்தனள். யானும்
பட்ச முடன்அவன் பக்கம் சென்றேன்.
செலவின் விவரம் தெரிய வினவினேன்:
பலவிவ காரம் பலத்தன: அவன்எனைச்
சீடன் அலையெனச் செப்பவும் நேர்ந்தது.
வீடுடன் வந்தேன்: விளம்பினேன். "அந்தோ!
பிறரும் நம்முறை பேசத் துணிவரே:
உறவினை விடுத்தல் ஒக்குமோ?" என்றனள்.
உற்றான் ஒருவன் ஒருநல் கட்சியோ
டுற்றான்: நல்கினான்: ஒளித்து வந்துபின்
"உரிய கமிஷனை உதவுக" என்றான்.
புரிவ தறியாது பொள்ளெனச் சென்றுயான்
மங்கையை வினவினேன். மதியொடு பணிந்து "நம்

செங்கைப் பொருளைத் திருப்பிக் கட்சிபால்
கொடுக்க; அவனைக் கொள்ளற்க." என்றாள்
வடுக்கண் டொழிக்கும் மந்திரி யனையாள்.
இத்தகை யறிவினள் என்னரும் பிள்ளைகளை
எத்தகை யுரியர் இயம்பினும் தன்னுடை
பொறிகளே காணினும் பொய்யெனும் பேதைமை
செறிவுறக் கொண்டனள்: சிறப்புற நின்றனள்.
செய்யஎன் தந்தை சீர்கள் அவள்தாய்
செய்யா ததனால் திட்டுவன் அடிக்கடி:
மனம்பொறுக் காது மாற்றுரை பகர்வேன்:
அனம்போல் வந்தெனை யாற்றியே நிற்பள்.
எண்ணிலா நண்பரை இழுத்துக் கொண்டியான்
உண்ணச் செல்லுவேன் உரையாது முன்னர்:
அறுசுவை யடிசில் அன்பொடு படைப்பள்:
சிறிதும் தாமதம் தெரிந்திலேன் என்றும்.
பாடுவள்: சுகமுறப் பாதம் வருடுவள்:
ஊடுவள்; உணர்த்த உவந்தின் பளிப்பள்.
உடையோ நகையோ ஒன்றும் என்றும்
படையெனக் கேட்டிலள்: பண்பெலாம் செய்தனள்.
தொள்ளா யிரத்தில் சுவாமி நாயகம்.
"கள்ளா யிருந்தவள் கனவாச் சென்றனள்"
எனவுரைத் திடவும் இரவினில் விழித்தவன்
மனஉவப் புடனே மருந்தினை வழங்கவும்
நீங்கினள். அவள் இனம் நீங்கிக் கொள்ளேன்
பாங்கென் றவள்சிறு பாட்டன் புத்திரி
மகள்மீ னாட்சியை மணந்துபெற் றேன்இரு
மைந்தர் "மேலு இனத்தொடு வரைவல் என்குணமே."

## திருநெல்வேலி ஜில்லாக்கோர்ட்டு வக்கீல் பிரஹ்மஸ்ரீ யம். பாண்டுரேங்க இராயரவர்கள் கடிதம்.

"எனது அன்புள்ள நண்பரவர்களே,

உங்கள் அருமை மனைவியவர்களது மரண சம்பவத்தைப்பற்றிய கார்டு கிடைத்தது. தங்களுக்கு நேர்ந்த இந்நஷ்டத்தைக் குறித்து யானும் என் குடும்பத்தாரும் மிகுந்த துக்கமடைகிறோம்.

இதைவிட அதிகமாக மனத்தைப் பிளக்கக்கூடியதும் சகிக்கமுடியாததுமான துர்ப்பாக்கியம் ஒன்றை நாங்கள் நினைக்கமுடியவில்லை. உயிர் துறந்தவர்கள் சாதாரண மனைவியைப்போன்றவர்களல்லர். இனி அவர்களை யொத்த ஒரு மனைவியை அடைதல் மிகவும் கஷ்டமான காரியம்; இல்லை, அசாத்தியமான காரியம். உங்கள் குடும்பத்திற்கு அவர்கள் ஓர் உண்மையான பூஷணமாயிருந்தார்கள். அவர்களில்லாத குறைவை நீங்கள் ஒருபோதும் உணராமல் இருக்கமுடியாது.

கடவுள் அவர்களை ஆசீர்வதித்துத் தமது பேரின்ப நிலையில் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்பது உங்களுடைய உண்மையான நண்பனாகிய என்னுடைய மனப்பூர்வமான பிரார்த்தனை.

ஒட்டப்பிடாரம்,<br>ஜுலை 7, 1901.

உங்கள் உண்மையுள்ள,<br>(ஒப்பம்) எம். பாண்டுரேங்கராயர்."

---

## வீரவநல்லூர் சப்ரிஜிஸ்டிராராயிருந்த ஸ்ரீமாந் வி.அ. சொக்கலிங்கம் பிள்ளையவர்கள் கடிதம்.

" எனது அன்புள்ள சகோதரரவர்களே,

உங்கள் மனைவியவர்களின் மரணத்தைக்கேட்டு மிகுந்த துக்கம் அடைகின்றேன். ஸ்ரீ. வள்ளிநாயக சுவாமியவர்கள் இங்கு வந்திருந்தபோது, அவர்களது நற்குணங்களை மிகச் சிலாகித்துப்பேசினார்கள். அத்தகைய மேன்மைவாய்ந்த உயிர்த்துணையை நீங்கள் இழந்தது உங்களுடைய பெரிய துரதிர்ஷ்டமே. அவ்வளவு சிறந்த ஒரு வாழ்க்கைத்துணையை இளமைப் பிராயத்தில் தங்களைவிட்டுப் பிரிக்கவேண்டுமென்பது கடவுளின் ஆஞ்ஞை. ஆதலால், கழிந்தகாரியத்தைப்பற்றிப் புலம்பியழுவதால் பயன் ஒன்றுமில்லை. அருமைச் சகோதரரவர்களே, இத்துக்ககாலத்தில் நீங்கள் தைரியம்கொண்டு, உங்களால் கூடியவரை மனச்சமாதானத்தோடு உங்கள் வாழ்நாளைக் கழிப்பீர்களாக. நமது அன்பார்ந்த சுவாமியவர்கள் திருவடிகளில் எனது வந்தனோபசாரங்களையும் நல்விருப்பங்களையும் சமர்ப்பிக்கவேண்டுகிறேன்.

வீரவநல்லூர், 23-6-1901.

தங்கள் உண்மையுள்ள,
(ஒப்பம்) வி. அ. சொக்கலிங்கம்."

## திருநெல்வேலி ஜில்லா அசிஸ்டண்டு சர்ஜனயிருந்த மிஸ்டர். இடா. பி. ஈவர்ஸ் துரையவர்கள் கடிதம்.

" அன்பார்ந்த மிஸ்டர் சிதம்பரம்பிள்ளை யவர்களே,

உங்களுடைய உத்தமமனைவியவர்களின் மரணச் சமாசாரம் கேள்வியுற்று மிகப்பெருந்துக்கமுற்றேன். உங்களுக்கு நேர்ந்த இவ்வரிய பெரிய நஷ்டத்தைக் குறித்து யானும் எனது மனைவியும் உங்கள்மீது மிகுந்த அநுதாபப்படுகின்றோம். இது கடவுள் இச்சை ; நாம் முணுமுணுக்கக்கூடாது ; நம் உதவிக்கு அவரையே நோக்கவேண்டும். உங்களுடைய துன்பங்களையெல்லாம் நீங்கள் சகிக்கத்தக்க சக்தியைக் கருணாநிதியான கடவுள் நிச்சயமாக உங்களுக்கு அளிப்பார்.

உங்கள் மனைவியவர்கள் என்ன வியாதியினால் எவ்வாறு இறந்தார்களென்ற விவரங்களனைத்தையும் அறிய விரும்புகிறேன். அவர்களுக்குச் சிகிச்சை செய்ய சரியான வயித்தியரையாவது மருத்துவச்சியையாவது ஏற்படுத்தினீர்களா ? அல்லது சாதாரண அம்பட்ட ஸ்திரீயை நம்பி விட்டுவிட்டீர்களா ? அவர்களுக்குச் சிகிச்சை செய்ய யான் அவ்விடத்தில் இல்லாமற் போனதைப்பற்றி மனவருத்தப்படுகிறேன். அந்தோ! அவ்வம்மையவர்கள் இனிமையும், வணக்கமும், சாந்தமும் வாய்ந்தவர்களாயிருந்தார்களே! உங்களுடைய சரியான மேல்விலாசம் தெரியாததனால் இந்த நிரூபத்தை மிஸ்டர் பழனியாண்டி முதலியார் விலாசத்திற்கு அனுப்புகிறேன். நாங்களெல்லோரும் இங்குச் சுக

மாக இருக்கின்றோம். மூன்றுமாதகாலத்திற்குள் பாளை யங்கோட்டைக்குத் திரும்பிவருவோமென்று நினைக் கிறோம். இந்த நிரூபம் நல்ல சமயத்தில் தங்கள்பால் வந்து சேருமென்ற நம்பிக்கை கொண்டும், தங்களிடம் மிகுந்த ஆழ்ந்த அனுதாபத்தைக் கொண்டு மிருக்கிற,

உதகமண்டலம், ஜூலை 6, 1901. — தங்களுண்மையான, (ஒப்பம்) இடா. பி. ஈவர்ஸ்."

---

## திருச்செந்தூரில் ரெவினியு இன்ஸ்பெக்டரா யிருந்து காலம் சென்றுபோன ஸ்ரீமாந் எ. உலகநாத பிள்ளையவர்கள் கடிதம்.

"எனது அன்புள்ள நண்பரவர்களே,

உங்கள் பிராணநாயகி மகாராசியம்மாளவர்களின் அகால மரணச் சமாசாரத்தைக் கேள்வியுற்று யான் அளவு கடந்து துக்கிக்கின்றேன். இச்சமாசாரம் உண் மையாக ஓர் இடியைப்போன்று வந்து என்னைத் தாக் கிற்று. உங்கள் கார்டும் நேற்று வந்தது. யான் ஒரு சில தினங்களுக்குமுன் ஒட்டப்பிடாரத்தில் பார்த்தபோது பூரண ஆரோக்கிய சரீரத்தைக் கொண்டிருந்த அப் பெண் சிரோமணியவர்கள் இன்று உயிர் துறந்து விட் டார்கள் என்பதை என்னால் நம்பமுடியவில்லை. அவர் களது இல்லறச்சன்மார்க்கங்களைக் குறித்து நீங்கள் உங்கள் சினேகிதர்களிடத்தில் புகழ்ந்து பேசுவதைக் கேட்டிருக்கின்றேன். யான் அவர்களை நேரில் அறிந்த தினின்றும் அவர்கள் பல நற்குணங்களும் கற்பிலக் கணங்களும் நிரம்பப்பெற்ற பெண்ணரசியவர்களே

யென்று மனப்பூர்வமாகக் கூறுகின்றேன். அவர்களைப் பற்றி விவரித்தெழுத எனக்கு வார்த்தைகள் கிடைக்க வில்லை. அந்தோ! பாவி யமன் அவர்களை நம்மிடத் திருந்து பறித்துக்கொண்டு போய்விட்டானே! இந்நஷ்டம் பரிகார மற்றதாகவன்றோ வந்துவிட்டது. என் இருதயம் உங்களைப்பற்றிய அநுதாபத்தால் நெக்குவிட்டு உருகுகின்றது. உங்கள் இருவரையும் ஒன்றுசேர்த்த விவாகத்திற்கு உயிரும் உடலுமாகிய குழந்தையை அவர்கள் அளிக்கப்போகின்றார்கள் என்னும் உயர்ந்த நம்பிக்கையுடன் எதிர்பார்த்திருந்த தருணத்தில் அவர்களை இழக்கிறதென்றால் அது சகிக்கக்கூடிய ஒரு காரியமா? எனது அன்புள்ள சகோதர ரவர்களே, இவ்வுலகில் இம்மாதிரி சம்பவங்கள் அடிக்கடி நிகழ்வது சகசமென்றும் நாம் ஈசுவர ஆஞ்ஞைக்குக் கீழ்ப்படிய வேண்டியவர்களாயிருக்கிறோமென்றும் நினைத்து நாம் தேறுதல் அடையவேண்டும்.

உங்களைப்போல உண்மையும் அன்பும் கொண்ட ஒரு கணவர் இந்நிகழ்ச்சியைப்பற்றி நினைத்து உருகாதிருப்பது கஷ்டம். ஆயினும், நீங்கள் இச்சம்பவத்தை அளவுகடந்து உள்ளத்தில்கொண்டு சரீர சுகத்தைக் கெடுத்துக் கொள்ளக்கூடாது. இத்துக்கத்தை நீங்கள் பொறுமையுடன் சகிக்கவேண்டும். வாஸ்தவத்தில் மகராசி யென்றே நான் எண்ணியிருந்த உங்கள் மனைவியவர்கள் இவ்வுலகத்தைத் துறந்தார்களென்று கேட்டது முதல்—யான் இனிமேல் ஒருபோதும் பார்க்கமுடியாத அழகும், புத்திக்கூர்மையும், அன்பும் ஜொலிக்கின்ற—அவர்களுடைய முகமானது என்முன்

னேயே நிற்கின்றது. தமது கணவரது நண்பர்கள் கூட்டாளிகள் முதலியவர்களுக்கு அவர்கள் செய்த உபசாரமும், மரியாதையும், வணக்கமும், அன்பும் நான் ஒருபோதும் மறக்கவே மாட்டேன். உங்களுக்கு நேர்ந்துள்ள துக்கம் உண்மையாகவே மிக மிகப் பெரியது. இத்துக்ககரமான மரணத்தில் யான் உங்களுடைய உண்மையான சகோதரனுக உங்களுடன் துக்க முறுகின்றேன். கடவுளது செயல்கள் நமது ஆராய்ச்சிக்கும் அளவுக்கும் அப்பாற்பட்டவை. அவர் நல்லவர்களைத் தெரிந்தெடுத்து விரைவாகத் தம்மிடம் சேர்த்துக் கொள்கின்றார் போலும். எனக்கு அடிக்கடி கடிதம் எழுதவேண்டுகிறேன். துக்கத்தில் ஆழ்ந்து வருந்துகிற,

திருச்செந்தூர், 1—7—1902. | உங்கள் அருமைச் சகோதரன், (ஒப்பம்) எ. உலகநாதன்."

---

திருச்செந்தூர் ஹாஸ்பிற்றல் சப் அஸிஸ்டண்ட் சர்ஜன் ம-ா-ா-ஸ்ரீ ஆர். எ. பீற்றர்ப்பிள்ளையவர்கள் கடிதம்.

"அன்புள்ள சகோதரரவர்களே,

நீங்கள் எழுதிய கார்டும் உங்கள் தந்தையவர்கள் எழுதிய கார்டும் இன்றுகாலையில் வரப்பெற்றேன். நான் நேற்று அனுப்பிய கார்டு உங்களுக்குக் கிடைத்திருக்கலாமென்று நம்புகிறேன்.

இருதயத்தைப்பிளக்கத்தக்க சமாசாரம் உண்மையென்று சந்தேகமற ஏற்பட்டுவிட்டது. பூரண இளமையும் பூரணகட்டும் வாய்ந்த ஒருவர் இவ்வளவு விரையில் நம்மிடத்தினின்றும் பிரிக்கப்பட்டன ரென்று

நினைக்கப்பயங்கர மாயிருக்கின்றது. இச்சம்பவம் உண்மையென்று எங்களுக்குத் தோன்றவில்லை. அவர்கள் உண்மையாக உயிரிழந்து விட்டார்கள் என்ற விஷயத்தில் நாங்கள் எங்களை நம்பமுடியவில்லை. இந்தத் துக்க சம்பவத்தை நினைக்க உண்மையில் மிக வருத்தமாயிருக்கின்றது. எனது மனைவியும் குழந்தைகளும் அவர்களை மிகவும் அதிகமாக நேசித்து அவர்கள்மீது மிகுந்த அன்பு பாராட்டினார்கள். அவர்களுக்கு ஏதாவது உதவி புரிய யான் பக்கத்தில் இல்லாமற் போய்விட்டேனேயென்று மனம் வருந்துகிறேன். ஆயினும், அவர்கள் பிராணனைக் காப்பாற்றுவதற்காக மனிதர் செய்யக்கூடிய ஒவ்வொரு முயற்சியும் செய்யப்பட்டிருக்கும் என்று நிச்சயமாக நம்புகிறேன். ஆனால் கடவுள் தமது அகண்ட ஞானத்தில் வேறுவிதமாக விரும்பியிருக்கிறார். அவர் இஷ்டப்படி நடக்கட்டும்; அறிந்து போகத் தக்க ஏழைகளாகிய நாம் என்ன செய்யக்கூடும்? நீங்கள் எவ்வாறு இத்துக்கத்தைச் சகிப்பீர்களென்று எங்களுக்குத்தெரியவில்லை. நாங்களே அவர்களைஇழந்த துக்கத்தைப் பொறுக்கமுடியாமலும் மனச்சமாதானத்தை அடையமுடியாமலும் வருந்துகிறோம். ஆயினும், மாற்றமுடியாத கடவுளின் ஆக்ஞைப்படி நிகழ்ந்த சம்பவத்தை மறக்க முயலுங்கள். நாங்கள் உங்கள்மீது பூரண அநுதாபத்தைக் கொண்டிருக்கிறோம். நீங்கள் சுகம்பெறக் கடவுளைத் தொழுது பிரார்த்திக்கிறோம்.

திருச்செந்தூர், ஜூன் 22, 1901.

தங்களின் மிகுந்த அன்புள்ள,
(ஒப்பம்) ஆர். ஏ. பீட்டர்.”

## திருநெல்வேலி பேட்டை ஹாஸ்பிற்றல் சப் அஸிஸ் டண்டு சர்ஜன் ம-ா-ா-ஸ்ரீ டி. எட்வர்டு பிள்ளையவர்கள் கடிதம்.

மனதன்பார்ந்த சகோதரரவர்களே,

திருக்கரங்குடிக்குப் போய் அங்கிருந்து திரும்ப வந்த உங்கள் கார்டு ஒரு பேரிடிபோன்று என் மனைவியையும் என்னையும் தாக்கிற்று அவர்கள் நோயாயிருந்தார்களென்பதே எங்களுக்குத் தெரியாது. அவர்களுக்கென்ன வியாதி நேர்ந்தது? உங்களுடைய இத்துக்கத்தில் எங்களுடைய உண்மையான அநுதாபத்தை நீங்களும் உங்கள் பெற்றோரும் அங்கீகரிப்பீர்களாக. கடவுள் உங்களுக்குப் பெரிய நஷ்டத்தைக் கொடுத்துவிட்டார். உங்கள் மனைவியவர்கள் உங்கள் குடும்பத்திற்கு ஓர் ஆபரணமாயிருந்தார்கள் என்பது எனக்குத் தெரியும். ஆதலால் உங்கள் குடும்பத்திலுள்ள ஒவ்வொருவரும் அவர்கள் பிரிவால் அருந்துயருள் ஆழ்வார்கள். ஐயோ! அவர்கள் இறந்து விட்டார்கள் என்று என்னால் நம்பமுடியவில்லையே. உங்கள் மீது உண்மையான அநுதாபம் கொண்டுள்ள,

| | |
|---|---|
| பேட்டை, திருநெல்வேலி<br>26—6-1901 | உங்கள் அன்பன்,<br>(ஒப்பம்) டி. எட்வர்டு. |

---

## பாளையங்கோட்டை வக்கீல் ஸ்ரீமாந். எஸ். பழனி யாண்டி முதலியாரவர்கள் மைத்துனர் காலஞ் சென்று போன ஸ்ரீமாந் யம். வி. கிருஷ்ணசுவாமி முதலியா ரவர்கள் கடிதம்.

*அன்பார்ந்த அத்தான் அவர்களே,*

*தங்களுக்கு நேர்ந்துள்ள துக்க சமாசாரத்தைக் கேட்டதுமுதல் எனக்குண்டாயிருக்கிற துக்கத்திற்குக் கங்கு கரை யில்லை. மனது அறிவை யான் திரும்ப அடைந்து, நீங்கள் சென்ற மாதம் 20-ந் தேதி யெழுதிய கார்டுக்குப் பதிலாக இச்சில அநுதாபவார்த்தைகளை வரைய, இத்தனை காலம் எனக்கு வேண்டியிருந்தது.*

*அந்தோ ! இஃது எளிதில் மறக்கப்படமுடியாத ஒரு பெரிய துர்ப்பாக்கியம். என்றாலும், யௌவன புருஷர்களானநாம், திவான் பகதூர் இராமசாமி செட்டியாரவர்களுக்குச் சமீபத்தில் ஒன்றன்பின் ஒன்றாக நேர்ந்த துக்கங்களை யெல்லாம் அவர்கள் எவ்வாறு சகித்தார்களோ அவ்வாறே, நமக்கு நேர்ந்துள்ள, நமது நெஞ்சைப்பிளக்கின்ற, துக்கத்தைச் சகிக்கவேண்டும். இதைப்பற்றி இன்னும் எழுதவேண்டியதில்லை. ஏனென்றால், அவ்வாறு செய்தல் உங்கள் துக்கத்தை ஞாபகப் படுத்துதற்குரிய ஒரு கருவியாகும். என் சகோதரி*

யும் நானும் உங்களுடன் துக்கமும் உங்கள் மீது அநு தாபமும் படுகின்றோம்.

தங்கள் உண்மையான,

55, தையப்ப முதலிதெரு } (ஒப்பம்)
சென்னை, ஜுலை 1, 1901. } எம். வி. கிருஷ்ணசாமி.

---

## ஓட்டப்பிடாரம் போஸ்டு மாஸ்டரா யிருந்த பிரஹ்மஸ்ரீ இராம சுப்பிரமணிய அய்யரவர்கள் கடிதம்.

அன்புள்ள நண்பர் அவர்களே,

உங்கள் மனைவியவர்களின் மரணத்திற்காக உங்களோடு மிகவும் துக்கிக்கிறேன். உங்களுக்கு நேர்ந்துள்ள நஷ்டம் மாற்றொணு வன்மையுள்ளது. அதை நீங்கள் எப்படிச் சகிப்பீர்களோ யான் அறியேன். இக்கடிதத்தை யெழுதும்போதும், அம்மாதரசியாரை நினைக்கும்போதும், எனது சரீரம் நடுங்குகின்றது. பூரண அன்பும், ஒழுக்கமும், வசிகரமும் வாய்ந்த அவ்வம்மையவர்களை நீங்கள் மனைவியாகக் கொண்டிருந்ததினுல் நீங்கள் பேரின்பப் பேறுற்ற ஒரு பிரபு என்று நினைத்திருந்தேன். ஆனுல் கடவுள் அப்பாக்கியத்தை உங்களிடமிருந்து பிடுங்கி விட்டார். மகராசியம்மை அவர்களினும் மிகுந்த அழகும் செல்வமும் உள்ள வேறோர் மாதை இரண்டாந்தரம் நீங்கள் மணந்து கொண்டாலும், மகாராசியென்ற பெயரும் அவர்கள் குணமும் உங்களைத் துக்கத்திற்குள் அடிக்கடி தள்ளும். என் அருமையான நண்பரவர்களே! மனுேதைரியம்

கொள்ளுங்கள்; கடவுள் ஆக்ஞை நாமெல்லோரும் இப்படிப்பட்ட கஷ்டங்கள் அநுபவிக்கவேண்டும் என்றிருப்பதால் கழிந்த காரியத்தைப்பற்றி வியாகூலப்படாதீர்கள். என் மனைவி வியாதியுற்றுப் பத்தமடையிலிருக்கிறாள்.

சிவகாசி, } தங்கள் அன்புள்ள,
3-8-1901. } (ஒப்பம்)கே. இராமசுப்பிரமணிய அய்யர்.

---

**திருநெல்வேலி நூரல் இஸ்லாம்பிரஸ் அதிபர் ம-ா-ா-ஸ்ரீ. கே. யம். அப்துல் காதர் அவர்கள் கடிதம்.**

அன்புள்ள ஐயா,

உங்கள் மனைவியவர்கள் தேக வியோக மடைந்த துக்ககரமான சமாசாரத்தை மிகுந்த மன வியாகூலத்தோடு கேள்விப்பட்டேன். நமக்கு இடுக்கண் வந்துற்ற காலங்களில் நம்மனத்தைக் குளிரச்செய்வன "உலகம் முழுவதும் ஒரு நாடகசாலை." "துன்பம் என்பது வேடம் மாறிய இன்பம்." என்னும் ஆன்றோர் வசனங்களே. தங்களுடைய எதிர்கால சுகத்தின் நிமித்தம் கடவுளைப் பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறேன்.

திருநெல்வேலி, } தங்களுண்மையுள்ள,
ஜூன் 20, '01 } (ஒப்பம்) கே. யம். அப்துல் காதர்.

---

## திருநெல்வேலிப் பாலம் ரயில்வே ஸ்டேஷனில் சிக்நல ராயிருந்த ஸ்ரீமாந். டி. நாராயண சுவாமி நாயுடு அவர்கள் கடிதம்.

அன்பார்ந்த சகோதரர் அவர்களே,

அந்தோ! என்செய்வோம! யான் மிகுந்த விசனத்துடன் உங்கள் அருமை மனைவியவர்களது மரண சமாசாரத்தை ஸ்ரீமாந். எஸ். பழனியாண்டி முதலியாரவர்கள் மூலமாக அறிந்தேன். தங்கள் மனைவியவர்களைப் போல அன்பும் அடக்கமும் நிறைந்துள்ள ஒரு மாதை அடைதல் அரிது. யான் அவர்களது மரணத்தைக் குறித்து உங்களோடு மிகுந்த துக்க முறுகின்றேன். இவ்வுலகத்தின் இயற்கையை அறிந்த நீங்கள் கழிந்த காரியத்திற்கு வருந்த வேண்டாமென்று தங்களை வேண்டிக் கொள்ளுகிறேன். எனினும், அத்துணை அழகும், ஒழுக்கமும், அன்பும், புகழத்தக்க நற்குணங்களும் வாய்ந்த ஒரு பெண் தங்களுக்கு இரண்டாவது மனைவியாக வரக்கூடுமென்று ஒருவரும் உறுதியாகச் சொல்ல முடியாது. எனது சிறிய அநுபவத்தில் நல்ல ஜனங்களே அகால மரணம் அடைகின்றார்கள். இது மிக விசனப்படத் தக்கது.

திருநெல்வேலி ரயில்வே ஸ்டேஷன். 20-6-1901.

தங்கள் உண்மையான,
(ஒப்பம்) நாராயணசாமி.

---

# அரும்பதவுரை.

| பக்கமும் வரியும். | பதம். | உரை. |
|---|---|---|
| | சாற்றுக்கவிகள். | |
| xiii- 1 | பொலிதரு | விளங்குகின்ற. |
| xiii- 2 | மாக்கள் | மனிதர். |
| xiii- 3 | உய்வழி | ஜனன மரணத் துன்பங்களினின்று பிழைக்கும் வழிகள். |
| xiii- 3 | நான்கா | நான்காக. |
| xiii- 3 | ஓதும் | கூறும். |
| xiii- 3 | நான்மறை | நான்கு வேதங்கள். |
| xiii- 6 | உதவி | உதவிபுரிந்து. |
| xiii- 7 | மூஇடத்தவர்க்கும் | பிரமச்சரியம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் என்னும் மூன்று ஆசிரமங்களில்நிற்போர்க்கும். |
| xiii- 7 | ஓவல்இல் | அழிவுஇல்லாத. |
| xiii- 8 | பயக்க | செய்ய. |
| xiii- 8 | பயிறலின் | கற்றலின். |
| xiii-11 | இல்லறம் அல்லது | இல்லறம் அல்லாதது (துறவறம்). |
| xiii-14 | துணை நலமாவது | துணைபுரியும் நற்பொருளாவது. |
| xiii-15 | மனைவி | 'மனைவி' என்னும் பொருள். |
| xiii-16 | சிதையினும் | அழியினும். |
| xiii-19 | வாழ்க்கை பயன் பெறும் | (மனைவி நல்லவளாக அமையின்) இல்வாழ்வு தனது பயனை அடையும். |
| xiv-21 | ஏறுமாறாகி | அடங்காது மாறுபட்டு. |
| xiv-23 | உடைத்தாயினும் | உடையதாயினும். |
| xiv-25 | விழலுக்கு | வீணுக்கு. |
| xiv-25 | நீர் ஒக்கும் | ஜலத்தை நிகர்க்கும். ஆல்அசை. |
| xiv-27 | அவ்வறம் துறந்த அவ்வறம் | இல்லறத்தின் நீங்கிய துறவறம். |
| xiv-28 | அறையினும் | கூறினும். |

xiv-29 அவமே-வீணே.
xiv-35 நினையாவும்-நினைத்த அனைத்தையும்.
xiv-35 அங்ஙன் இயற்றி - நினைத்தபடியே செய்து
xiv-36 பயிர்ப்பு - அருவருப்பு.
xiv-37 மால்கொள்பொற்பும் - மயக்கத்தைக் கொள்ளத்தக்க அழகும்.
xiv-40 இதம் செய்து - நன்மையைச் செய்து.
xiv-40 இதம் களிப்பவளாய் - மனம் சந்தோஷிப்பவளாய்.
xiv-41 காய்சினம் - வருத்தும் கோபம்.
xiv-41 இறையும் - அணுவளவும்.
xiv-43 இல்லாய் - மனைவியாய்.
xv-44 வாய்க்க - பொருந்த.
xv-44 யாத்தகை - பெருந்தகைமையுள்ள.
xv-45 வேள் - ஆண்மகன்.
xv-46 மகிழா - மகிழ்ந்து.
xv-48 ஒண்பா - ஒள்ளியபா - வெண்பா.
xv-49 அளகை - தென் அளகை நகர் - ஒட்டப்பிடாரம்.
xv-50 முடிமன் - கீழமுடிமன் நகர்.
xv-51 நிதீஇ - நிறுத்தி.
xv-55 ஊனம் ஆர் - குற்றம் பொருந்திய.
xv-56 மன்னுறு அகற்ற - பொருந்தாது விலக்க.
xv-56 மால் - பெருமான்.
xvi- 1 தே - தித்திப்புள்ள.
xvi- 1 சிந்து - உதிர்க்கின்ற.
xvi- 1 பொழில் - சோலையையுடைய.
xvi- 2 பூமான் - புமான் - ஆண்மகன்.
xvi- 2 புனிதை - நற்குணமுடையவள்.
xvi- 3 மனையாள் - மனைவி.
xvi- 3 தூ - சுத்தமுள்ள.
xvi- 3 மாமதியின் - பெரிய மதியினும்.
xvi- 3 பொற்பை - சிறப்பை.
xvi- 3 தொகுத்து - சுருக்கி.
xvi- 3 அணியா - அழகாக.
xvi- 4 பாமா - செய்யுளாகிய சிறந்த.
xvi- 5 கடிமன் இயங்கள் - கலியாணங்களில் இடைவிடாது முழங்குகின்ற வாச்சியங்கள்.
xvi- 5 கறங்கு - ஒலிக்கின்ற.
xvi- 5 கடவுள் நாட்டின் - தேவநாட்டின்.
xvi- 6 இயங்க - ஒலிக்க.
xvi- 6 அரம்பையர் - தெய்வப் பெண்கள்.
xvi- 6 கோலவிழி - மையிட்ட கண்.

xvi- 6 குறித்து அயிர்க்கும்- நோக்கிச் சந்தேகிக்கும்.

xvi- 7 முயல் தவத்தால்- செய்நோன்பால்.

xvi- 7 முளைத்தோன்- பிறந்தோன்.

xvi- 8 அடிமன் - அளவிடப்பட்ட நான்கு அடிகளால் பொருந்தும்.

xvi- 8 அயின்று-உண்டு.

xvi- 8 தேக்கு அறியார்- தெவிட்டுதல் அறியாதவர்.

xvi-11 பொருவு இல் - ஒப்பு இல்லாத.

xvi-12 புகறல்-சொல்லுதல்.

xvi-12 போதாதே - திருப்தியாகாதே - பொருந்தாதே.

xvi-13 பற்று அற்று - உலகப் பற்றை விட்டு.

xvi-13 ஒன்றே - ஒரு பொருளையே - கடவுளையே.

xvi-13 பதியே-கணவனே.

xvi-13 பரிந்துறலின்- விரும்பிப் பொருந்துதலின்.

xvi-14 முற்றும்-சிதறும்.

xvi-14 திறம்பாத - மாறுபடாத.

xvi-14 மொய்ம்பில்-வலிமையில்.

xvi-14 ஆறு-கெடாத.

xvi-14 முதுக்குறைவு - பேரறிவு.

xvi-15 இளையாத்தகையில் - குறைவுபடாத பெருந்தன்மையில்.

xvi-16 வற்குன்றனைய - அசையாத வன்மையுள்ள மலை போன்ற.

xvi-16 பெரியோரில் - பெரியோரைப்போல.

xvi-16 மகிமை- பெருமையாகிய.

xvi-16 வரம்புற்றே - எல்லையுற்றே.

நூன்முகம்.

1- 1 செம்பொன்மகள்நேர் -இலக்குமியை யொத்த.

1- 2 இம்பர்-இவ்வுலகத்தவரால்.

1- 3 மகராசி என்பவள்தன் -மகராசிஎன்று அழைக்கப்படுபவளுடைய.

1- 3 மாண்புஉரைக்க-பெருமையைச் சொல்ல.

1- 3 தந்திமுக நாதன் - யானை முகத்தையுடைய கணபதியின்.

1- 6 இவண்நிலவ- இவ்வுலகத்தில் நிற்க.

1- 7 நீபமணிஎம்மான் -கடம்புமணியை அணிந்த எம்பிரானது.

1- 8 பதம்-பாதங்களை.

# அரும்பதவுரை.

1- 9 நினைக்கும் முன்னே வர - யான் நினைத்த மாத்திரத்தில் வரும் படியாக.

1-10 மொய்ம்பாக - வலியோடு.

1-11 கமழ்-மணக்கின்ற.

1-11 எம்மாண்பும் - சகல பெருமைகளும்.

1-12 மென்பூ அடி-மெல்லிய மலரைப் போன்ற பாதங்களை.

2- 7 நன்னீர்மைதான்-நல்ல ஒழுக்கங்களையே.

2- 7 என்ஞான்றும் - என்றும்.

2- 7 பயிலற்கும் - அப்பியசித்தற்கும்.

2- 9 வான்மதியால் - தூய புத்தியால்.

2-10 பான்மையுடன்-குணத்துடன்.

நால்.

3- 1 சந்தம் செறியும் - சந்தனமரங்கள் அடர்ந்திருக்கும்

3- 1 தமிழ்மலை-பொதிகை.

3- 1 தண்முகில் - குளிர்ந்த மேகம்.

3- 2 உந்தும் திரை-உயரும் அலை.

3- 2 பொருநை - தாமிர வருணி நதி.

3- 3 தடமும் - குளங்களிலும்.

3- 3 கழனியும்-நஞ்சைகளிலும்.

3- 4 பரவும் - பரந்துசெல்லும்.

3- 5 தீம் கன்னலா-தித்திப்புள்ள கரும்பு போலவும்.

3- 5 பூங்கமுகா-பூநிறைந்த கமுகுமரங்கள் போலவும்.

3- 7 வெண் தரளத்தை - வெள்ளை முத்துக்களை.

3- 9 சாந்தம்-சந்தனம்.

3- 9 தண்பனிதம்-பச்சைக் கருப்பூரம்.

3-10 புனல்தோயும் - நீரில் குளிக்கும்.

3-10 ஏந்திழையார் - பெண்களுடைய.

3-11 மிளிரும்-ஒளிரும்.

3-13 காவு-சோலை.

3-14 செண்டு - பூம்பந்து போன்ற.

3-15 கடுக்கைப் போதை - கொன்றை அரும்புகளை.

3-15 மந்தி - பெண்குரங்குகள்.

3-17 மன்றல்-வாசனை.

3-18 தென்றல் - தென் காற்று.

3-18 இன்தமிழ் - இனிய தமிழை.

3-19 கிள்ளை-கிளிகள்.

## அரும்பதவுரை.

3-20 கோது அகல-குற்றம் நீங்க.
3-21 பொன்னாடு - தேவர் நாடு.
4- 1 நந்து ஊர் - சங்குகள் ஊர்கின்ற.
4- 2 பைந்தோகை - பசுமையான தோகைகளையுடைய.
4- 3 மாமயில் ஊர்-சிறந்த மயில் மீது ஏறிச் செல்கின்ற.
4- 3 மணாளன் - கணவன்.
4- 4 சேமம் உறும் - நலத்தைப் பொருந்தும்.
4- 5 பொன்நகரம் - தேவலோகமாகிய.
4- 5 புகழ் எழிலால் - புகழ் பெற்ற அழகால்.
4- 6 மின்னும் மணி-ஒளிர்கின்ற இரத்தினங்கள் பதிக்கப்பட்ட.
4- 7 மாண்போடு - பெருமையோடு.
4- 7 கோலம் உறும் - அழகுறும்.
4- 8 மாபுரம் கீழாக-பெரிய நகரம் கீழ்ப்படும்படி.
4- 9 மீது உலவி மன்னும்-(தன்) மேல் உலவப் பெற்று நிற்கும்.
4-10 வன்ன-பலநிறமுள்ள.
4-11 வாகாய்-அழகாய்.
4-12 சயிலந்தனை - சயில மலையை.
4-12 சீரா-சிறப்பாக.
4-12 காரா - மேகங்கள் போல.
4-13 அதன் இடையே-கூந்தல் அசையும்போது அதன் இடையில்.
4-15 உண்டாம்-தோன்றும் (வினைமுற்று).
4-15 கார் விலகி ஒளிர்-மேகங்கள் விலகியபோது பிரகாசிக்கும்.
4-17 வார்-கச்சு.
4-18 ஏர்-அழகு.
4-20 பயின்று-கற்று.
4-21 சுந்தரத்தால் - அழகால்.
4-21 வென்ற - (மற்றைய நகர ஆடவர்)தோல்வியுறச்செய்த.
4-22 கோல - அழகுநிறைந்த.
4-22 ஐந்துஅணையில்-ஐந்துவகை மலர்களால் செய்யப்பட்ட படுக்கையில்.
4-23 கரந்து-மறைந்து.
4-23 அனங்கன்-மன்மதன்
5- 1 புயல்-மேகம்.
5- 5 ஓதை-ஒலி.
5- 6 கானஒலி—சங்கீதஒலி.
5- 9 மஞ்சு-மேகம்.
5-11 மீன்-நட்சத்திரங்கள்.
5-13 திங்கள் - பிறையானது.

5-13 வதனச்சிறந்த - முகத்தினது சிறந்த.
5-15 தேசு உண்டு - பல மூற்று.
5-16 ஆசு உண்டு - குறை வற்று.
5-18 கோதில்-குற்றமற்ற.
5-19 நயந்து அருந்த-விரும்பி உண்ணுமாறு.
5-24 குகன்-கந்தன்.
6- 6 மோதும் ஒலி வாரிதியை-அலைகள் முழுங்கும் ஒலியையுடைய சமுத்திரத்தின் சத்தத்தை.
6- 9 பொன்னின் மணியின் பொலிந்து-பொன்னுலும் மணிகளாலும் சிறந்து.
6-11 முழவு-மிருதங்கம்.
6-13 போகம்-இன்பங்கள்.
6-16 வேந்தர் அருள் - அரசருக்குரிய அறக்கருணையும் மறக்கருணையும்.
6-18 மரபும்- குலத்தையும்.
6-23 தாரகைக்குழுவில்-நட்சத்திரக் கூட்டத்தில்.
6-24 தகவோடு-பெருந்தன்மையோடு.
7- 1 பாகுமொழியார் - கற்கண்டுபோன்றசொல்லையுடைய பெண்கள்.
7- 5 சீர்கொள்முக- புகழைக்கொள்ளும் முகத்தையுடைய.
7- 6 வண்மைசால்-உதாரம் நிறைந்த.
7- 7 செய்யோன் - நல்லோன்.
7-10 தீரன்-வீரன்.
7-12 நீடுற்ற சீர் - நீண்ட புகழ்.
7-14 ஆண்தகையோர் - ஆண்தன்மையுள்ளோர்.
7-15 சீலம்-ஒழுக்கம்.
7-16 கலை-நூல்கள்.
8- 1 மின் அனையாள் - மின்போன்ற ஒளியை உடையாளது ; மின்போன்ற இடையை உடையாளது.
8- 2 இப்பொன்னினை - இப்பொன்போன்றவளை.
8- 5 பொன்மகளே போல்வாள் - இலக்குமியைப் போன்ற இவளுடைய.
8- 5 புங்கமுடன் - உயர்ச்சியோடு; தூய அகத்தோடு.
8- 6 மதி-பிறை.
8- 7 பொற்புடனே - அழகுடனே.
8- 8 சேல் உண் கண்-கயல் மீனை வெல்லும் கண்களையுடைய.
8- 9 பேறு-பயன்.
8-12 ஒள்ளிய- அறிவுடைய.

8-12 நல்சீரால் - நல்லசிறப்பால்.
8-17 நறும் குதலை - நல்ல மொழியை யுடையாளது.
8-20 மருந்து-அமிழ்தம்.
8-24 தகவாகும் - பொருந்தும்.
9- 4 நயந்து-விரும்பி.
9-11 சந்த சயிலா-அழகிய சயில மலையில் வசிப்பவனே.
9-17 பேதைப்பருவம்-ஐந்து வயது முதல் ஏழு வயதுவரை யுள்ள காலம்.
9-17 பெதும்பைப்பருவம் - எட்டுவயதுமுதல் பதினொரு வயதுவரை யுள்ள காலம்.
9-18 மங்கைப்பருவம் - பன்னிரண்டு வயது முதல் பதின்மூன்று வயதுவரை யுள்ள காலம்.
9-18 மதி-பிறை.
9-19 முன்திதியில் - பூர்வபட்ச நாள்களில்.
9-20 தன்திகழ்தேசு-தனது ஒளியோடு பொருந்திய நிறைவை.
9-21 காப்புடை - பெரிய சுவர்களால் சூழப்பட்ட.
9-21 இல்லத்து-வீட்டில்.
9-23 நல்கி-கொடுத்தனுப்பி.
10- 1 அன்னம் - அன்னம் போன்ற நடையை உடையாள்.
10- 1 அரும்மரபின் - அருமையான குலத்தின்.
10- 1 மாண்புக்கும்-சிறப்புக்கும்.
10- 2 மின்னாள் - மின்னல் போன்றவளது.
10- 2 மேன்மைக்கும்- மேம்பாட்டிற்கும்.
10- 3 வனப்புக்கும் -அழகிற்கும்.
10- 4 திருந்து இழையை - திருந்திய ஆபரணங்கள் அணிந்தாளை.
10- 4 தேவியா-மனைவியாக.
10- 7 நங்கையினை - பெண்ணிற் சிறந்தாளை.
10- 8 புங்கவராம் - கடவுளராம்.
10-10 பொன் உலகம்-சுவர்க்கலோகத்தை.
10-10 பொற் கொடியின் - பொன்னால் செய்யப்பட்ட கொடியைப் போன்றாளின்.
10-12 உரியோர்க்கு-நெருங்கியோர்க்கு.
10-13 மணப்பருவம். விவாக வயதை.
10-13 கண்டதனால் - எய்தியதனால்.
10-14 நன்னெறியே - நல்ல ஒழுக்கமே,

10-16 சீர் நல்கும்-சிறப்பைத் தரும்.
10-17 அன்னவை-அவற்றை.
10-17 உவகையராய் -சந்தோஷம் உடையவராய்.
10-19 எப்பதிக்கும் - எந்நகரினும்.
10-20 நன்றேயாம் - நன்மை வாய்ந்ததேயாம்.
10-21 உலகாண்டாள் -உலகாண்ட நாயகி என்னும் தேவியினது.
10-23 புவிராசர்க்காத்த - அரசரைக் காப்பாற்றிய.
10-23 போத-அறிவுமிக்க.
11- 4 அலகு இலா-எல்லையில்லாத.
11- 7 கோஎனவே- இப்பணிகளைச் செய்தோன் ஓர் அரசனேயாவன் என்று அப்பணிகளைக் கண்டோர் சொல்லும்படியாக.
11- 7 மெய்ஆயும்-கடவுளைப் பற்றி விசாரிக்கும்.
11-13 விந்தையுளோன்- வீரலட்சுமியையுடையோன்.
11-16 பின்வந்தாள் பேர் மாலையம்மை - தங்கையின்பெயர்மாலையம்மை
11-19 பொய்தீர்-மெய்.
11-20 அகம் உடையோன்-மனதைஉடையோன்.
11-21 மேலோர்-பெரியோர்.
11-22 பொலிவு உற்றோன் மிகுந்தவன்.
11-22 சால-மிகுதியாக.
11-23 அருள்சேர் - கிருபையைக் கொள்ளும்.
12- 1 அனல்-நெருப்பு.
12- 1 அனிலம்-காற்று.
12- 1 வானம்-ஆகாயம்.
12- 5 எல்-சூரியன்.
12- 6 தன்மம்-தருமம்.
12- 7 ஓங்கு-வளரும்.
12- 9 'வக்கீல்'-என்பது ஆங்கில மொழி. இதன் பொருள் 'நியாய துரந்தரன்'.
12-11 'கேசு' என்பது ஆங்கிலமொழி. இதன்பொருள் 'வழக்கு.'
12-14 செம்மைசால் - கனம் நிறைந்த.
12-15 பின்னுக்கு - பின்போன்றவளுக்கு.
12-15 நல்தலைவன்-நல்லகணவன்.
12-18 காதலியா-மனைவியாக
12-23 கருத்து - மனம்.
12-24 இந்தவகை-இவ்வாறு.
13- 2 அறைவேன்-சொல்லுவேன்.
13- 2 பாங்காக-சிறப்பாக.
13- 4 துணிந்து - தீர்மானித்து.
13- 6 ஒண்குணம் - சிறந்த குணம்.

13- 6 தோய்ந்தவளாய் -பொருந்தியவளாய்.
13- 7 சான்ற - மாட்சிமைப்பட்ட.
13-10 அம்சொல் பகர் - அழகிய சொல்லை மொழியாநின்ற.
13-11 ஆராயும்-சூழ்ச்சி புரியும்.
13-12 சீராக-பொருத்தமாக.
13-14 பாரோர் - பூமியிலுள்ளோர்.
13-15 பூமான்-புமான் - ஆண்மகன்.
13-16 தகைமை - தகுதிவாய்ந்த.
13-18 அகம் உறும் - மனம் விரும்பும்.
13-20 ஆர்வமொடு - விருப்பமோடு.
13-24 குடிமாண்பும்-குடும்பத்தின் மாட்சியும்.
13-24 தூய்து-சுத்தமானது.
14- 1 குறித்தேன் - சிந்தித்தேன்.
14- 2 தகைமையொடு-தகுதியோடு.
14- 3 சால நமக்கு உரிய - மிகவும் நமக்கு உரிமையுள்ள.
14- 4 செம்மை யுளது-சிறப்புற்றது.
14- 6 நவின்றனர்-கூறினர்.
14- 7 நண்ணினர் - சேர்ந்தனர்.
14- 8 போந்து-போய்.
14- 9 சூரியத்தின் - சூரியம் என்பவளின்.
14-10 சூரிய வேள் - சூரியன் என்னும் ஆண்மகன்.
14-13 முகமன்-உபசாரவார்த்தைகள்.
14-14 நனி-மிக.
14-17 ஓரை-நட்சத்திரம்.
14-19 கிருகம் தன்னில்-வீட்டில்.
14-21 மங்கலமா-மங்களமாக
15- 1 இவ்வணம் - இவ்வண்ணம்-இவ்வாறு.
15- 2 தம் பதியே-தமது நகரையே.
15- 2 மன்ன-பொருந்த.
15- 4 ஐது உறவே - அழகு உறவே.
15- 6 பீடம்-ஆசனம்.
15- 6 நன்காக-நன்றாக.
15- 6 பொன்மிகும் - அழகு மிகும்.
15- 7 செவ்வி-அழகு-சிறப்பு.
15- 9 விந்தையுள - விநோதமாயுள்ள.
15- 9 மீன் கணங்கள்-நட்சத்திரக் கூட்டங்கள்.
15- 9 புடை சூழும் - பக்கத்தில் சூழ்ந்துகொண்டிருக்காநின்ற.
15-10 சந்திரன்மா - சந்திரனுடைய பெரிய.
15-10 நிகரா-நிகராக-ஒப்பாக.
15-10 பந்தர்-பந்தல்.

15-11 குளப்பு, வால் சேட்டு, லஸ்டர் என்பவை ஆங்கிலச் சொற்கள். இவை மூவகையான கண்ணாடி விளக்குக ளின் பெயர்கள்.
15-16 இங்கிதமா - இனிமை யாக.
15-16 இனிது-நன்கு.
15-17 செவ்வியால்-அழகால்-சிறப்பால்.
15-18 எய்தியது ஒத்து-வர்த்து போல.
15-18 ஆர்வமொடு - ஆசை யோடு.
15-19 மணநாள்-விவாகமுகூர்த்த தினம்
15-19 கிட்டுதலும்-வருதலும்.
15-21 பொற்றொடி நல்லாரும் - பொன்வளையல் களை அணிந்த பெண் களும்.
15-22 காளையரும் - யௌவன ஆடவரும்.
15-22 சிற்றிடையார் - சிறிய இடைகளையுடையமக ளிரது.
15-23 கன்னல்மொழி-கரும்பு போன்ற சொற்களை.
15-13 காவில்-சோலையில்.
16- 1 பல் இயங்கள்-பலவாச் சியங்கள்-பல வாத்தி யங்கள்.
16- 1 தாம்முழங்க-தாம் ஒலிக்க.
16- 1 பைம்பொன் சிவிகை யினில் - பசுமையான பொன்னாற் செய்யப் பட்ட தண்டிகையில்.
16- 2 சோபனமா - மங்கள மாக.
16- 6 அநுசர்-தம்பியர்.
16- 6 கணம் உறவே - லக்க ணம் வரவே.
16- 7 மன்றல்வினை - விவாக த்தை.
16- 9 நெருநல்-முதல்நாள்.
16- 9 குடபால் - மேல்திசை யில்.
16- 9 கதிரோன்-சூரியன்.
16-12 வான் போற்றும்-ஆகா யத்தை வணங்கும்.
16-14 ஆர்கலி-கடல்.
16-16 கூர்ந்தார்-மிகுந்தார்.
16-18 பூமன் - அரசனைப் போன்ற.
16-19 திருமஞ்சனம் - அபி ஷேகம்.
1-620 இதம்-நன்மை.
16-20 ஆட்டி-செய்து.
16-21 மாண்பு உருவம்-மாட் சிமை பொருந்திய சரீ ரம்.
16-21 மதனோ-மன்மதனோ.
16-22 களிகூர - சந்தோஷம் மிக.
16-22 மாண்பா-சிறப்பாக.
16-23 அணிசெய்து - அலங் காரம் செய்து.

# அருஞ்பதவுரை.

17- 1 நகைசேரும் - பெருமை அடையும்.
17- 1 வாள்விளியாம் - ஒளி பொருந்திய கண்ணுகிய.
17- 2 வதன மதியாளை-முகமாகிய சந்திரனையுடையாளை.
17- 3 நல்துசால் - நல்லவஸ்திரத்தாலும்.
17- 3 நாள்மலரால் - புதிய மலர்மாலைகளாலும்.
17- 4 பொன்மணிப் பூணுலும் - தங்கத்தாலும் இரத்தினங்களாலும் செய்யப்பட்ட ஆபரணங்களாலும்.
17- 5 பூமகளோ - இலக்குமியோ.
17- 5 பொற்கொடி -பொன்ளுற்செய்த கொடியைப் போன்றவள்.
17- 6 நாமகளோ - சரசுவதியோ.
17- 6 நாஏத்த-நாக்கள் துதிக்க.
17- 7 ஆல் அசை.
17-10 ஏர்பெறவே - சிறப்புறவே.
17-10 தார்குழலார் - மலர்மாலை சூடிய கூந்தலையுடைய பெண்கள்.
17-10 பொன் அனையாள்-இலக்குமியைப் போன்றவளது.
17-10 பொற்பும் - அழகும்.
17-13 வேதமநு - வேதங்களிலும் மநுதரும நூலிலும் சொல்லப்பட்ட.
17-14 தேமறையோர் - கடவுட்டன்மை வாய்ந்த வேதங்களை யுடைய அந்தணர்.
17-15 சீரொடு - சிறப்போடு.
17-15 ஆசிசொல - பிரார்த்தனைகளைக் கூற.
17-16 வையமெலாம் -உலகத்தி லுள்ளவர்க ளெல்லாம்.
17-17 மங்கல நாணை-தாலிக் கொடியை.
17-18 துங்கன் - மேன்மை யுடையோனுகிய.
17-20 பண்போடு - முறைப்படி.
17-21 தார்-பூமாலைசூடிய.
17-22 செய்ய-அழகிய.
17-22 செய் இழையின்-அழகிய ஆபரணத்தையுடையாளது.
18- 1 கன்னி-இம்மணமகள்.
18- 1 கொழுநன் - கணவனுடைய.
18- 2 வன்னிதனை- அக்கினியை.
18- 3 அருந்ததியும் - அருந்ததி நட்சத்திரத்தையும்.
18- 5 சிந்தைதனில் - மனத்தில்.

18- 5 செறிந்தே-நிறைந்தே

18- 6 பைந்தொடியும் - பசுமையாகிய பொன்னாற் செய்தவளைகளை அணிந்த மணமகளும்.

18- 6 பலாண்டு இசைப்ப - பல்லாண்டு என்னும் ஒருவகை வாழ்த்துக் கவியைச் சொல்ல.

18- 9 மன்றநகு - விவாகத்திற்கு.

18-11 போனகமும் - சாப்பாடும்.

18-12 விந்தையெலாம் - பலங்கு, சங்கீதம், முதலிய விநோதங்களையெல்லாம்.

18-15 தம்பதிகட்கு - தம்பதிகளுக்கு.

18-16 தம்பதிகள் - பர்த்தாவும் பாரியும்.

18-17 அறுமுகனை - ஆறுமுகக் கடவுளை.

18-18 பண்புறவே - குணங்களுறவே.

18-18 வண்புலவர் - தெள்ளிய வித்வான்கள்.

18-20 பாங்கோடு - சிறப்போடு.

18-20 அளகைப்பதி - தென் அளகை நகரை.

18-24 வள்ளியராய் - குறையாது கொடுப்பவராய்.

19- 1 தன் நேர்தான் ஆகும் - தனக்கு ஒப்பு தானே ஆகும்.

19- 5 பத்தாவே - பர்த்தாவே.

19- 6 உத்தாரம் - உத்தரவுகளை.

19- 6 மீறுமை - கடவாமை.

19- 6 முத்தும் அவன் பணியே - கொஞ்சுகின்ற அவனுடைய ஊழியமே.

19- 7 மெய்திகழும் - உண்மையானது பிரகாசிக்கும்.

19- 9 சீர்பரவும் - புகழ்கள் பொருந்தும்.

19- 9 தொல்கேள்வி - பழைய நூற் கேள்விகளையுடைய.

19- 9 செம்மலது - பெருமையிற் சிறந்தோனது.

19- 9 சந்நிதியில் - முன்னிலையில்.

19-10 பார்பரவும் - பூமியில் ஒளியைப் பரப்புகின்ற.

19-12 தழைந்து - பெருமையுற்று.

19-13 மாண்பு அமைந்த - சிறப்பு உற்ற.

19-14 தித்திப்பாம் - மதுரமுள்ளவையாகும்.

19-14 கைப்பு உவர்ப்பு - கசப்புப் பொருள்களும் உப்புப்பொருள்களும்.

19-14 கொய்தில் - விரைவில்.

19-15 விஞ்சையினல் - மந்திரத்தினல்.

19-15 மெல் அடிசில் - மெல்லிய சோறு.

# அரும்பதவுரை.

19-15 பல் சுவையோடு - பல சுவைக்கறிகளோடு.
19-16 எஞ்சல்இலாது-குறைவு இல்லாது.
19-17 உறுபசியை-வருத்தும் பசியை - பெரும் பசியை.
19-20 அருத்துதல் - ஊட்டுதல்.
19-22 தன்பதும-தனதுதாமரை மலர்போன்ற.
19-24 தவம் மலிந்த - தவத்தால் நிறைந்த.
20- 1 தயிலம் இட்டு - தயிலத்தைத் தேய்த்து.
20- 1 காந்தள் நிகர்-காந்தள் மலரைப்போன்ற
20- 2 நீர் வார்ப்பள் - ஸ்நானம் செய்விப்பள்.
20- 2 தன்பதிக்கு-தன் கணவனுக்கு.
20- 4 பரிந்து-விரும்பி
20- 5 தோற்றம் மிகு-அழகு மிகுந்த.
20- 5 தொட்ட - கொண்ட.
20- 5 வெல்ல-ஜயிக்க.
20- 6 ஏற்றமொடு - சிறப்போடு.
20- 6 கோர்ட்டு-இஃது ஆங்கில மொழி. இதன் பொருள் 'நீதி ஸ்தலம்.'
20- 6 ஏற்ற-பொருத்தமான
20- 7 பூட்சு - இது ஆங்கில மொழி. இதன் பொருள் 'தோலாற்செய்யப்பட்ட ஒருவகைப் பாதரட்சை.'
20- 8 எச்சரித்து - சித்தப்படுத்தி.
20- 9 அன்னவை-அவற்றை.
20-10 பாங்கில்-பக்கத்தில்.
20-13 காந்தன்-கணவன்.
20-14 மஞ்சம் மிசை - கட்டிலின் மீது.
20-16 மேல்மலர் மிதக்க-படுக்கையின் மீது மலர்கள் மிகுந்து கிடக்க.
20-17 நோக்கு அறிந்து-குறிப்புத் தெரிந்து.
20-23 மாசு உறுது ஆள்வாள் - அழுக்கைப் பொருந்தாது காப்பள்.
20-24 இல்தொழில்கள்-வீட்டுவேலைகள்.
21- 1 மன்காரியம் - அரசனது காரியங்களை.
21- 2 நன்சார்பே - நல்ல தன்மையுள்ளவற்றையே.
21- 3 தகவாயது - தகுதியுள்ளகாரியங்களையே.
21- 5 மொய் இருளை-நெருங்கிய இருளை.
21- 5 முனிகதிர்போல்-முற்படும் சூரியன்போல.
21- 5 மூடம் எனும்-மடமை என்னும்.
21- 7 பதமே-பாதங்களையே
21- 9 மின் அணிகள்-ஒளிர்கின்ற ஆபரணங்கள்.

21- 9 மென்துகில்கள்-மெல்லிய வஸ்திரங்கள்.

21-11 சீர் ஆம்-பொருந்துவதாம்.

21-14 கற்பகம் - வேண்டியவெல்லாம் தரும் ஐந்தருக்களில் (மரங்களில்) ஒன்று.

21-14 கணவி-மனைவி. இச்சொல்லைப் பழைய இலக்கியங்களில் காண்பது அருமை. 'கணவன்' என்பதற்குப் பெண் பாற் சொல் போலும் இஃது. இத்தகைய சொற்களைச் சிருஷ்டித்தல் தமிழ் பாஷையின் பெருக்கத்திற்கு இன்றியமையாதது.

21-18 ஆற்றளே - பிரிவைப் பொறுக்கமாட்டாளே.

21-20 நலிந்து-துன்புற்று.

21-21 அணி-அழகிய.

21-22 உவகை ஓங்குவாள்-சந்தோஷத்தில் அதிகமாக வளர்வாள்.

21-22 பூங்கழல்கள்—தாமரை மலர்போன்ற பாதங்களை.

21-24 அன்னுள் அகத்து வெம்மையினை-அவளுடைய மனத்தில் உண்டாய துன்பத்தை.

21-23 இன்பப் புணரியால் ஆற்றுவாள் - இன்பக் கடலால் அவிப்பாள்.

22- 1 அன்பன்-கணவன்.

22- 3 துன்பமெல்லாம்-துன்பம் முழுதும்.

22- 4 நணுகியது - வந்தது.

22- 6 மன்னி வாழ்ந்தார்-பொருந்தி வாழ்ந்தாரை.

22- 6 நல்நுதலை-நல்ல நெற்றியை உடையாளை.

22- 8 கோதே-குற்றமே.

22- 8 ஆகமே-சரீரங்களே.

22-10 யாம் ஏகமே - நாம் வேறல்லேம்.

22-10 சோகம் இன்றி-சோர்வு இல்லாமல்.

22-12 நயந்து-சிறந்து.

22-14 சகிமார்கள்-தோழியர்கள்.

22-15 ஏற்க எனில்-கொள்க என்றால்.

22-16 தவிர்க எனில்-கொள்ளவேண்டா எனில்.

22-17 நாயகனை-தனது கணவனை.

22-18 ஓம்புவாள் - பாதுகாப்பாள்.

22-21 தெய்வீகம் - தெய்வத்தன்மை.

22-22 மை விரும்பும் (கண்ணில் இடப்படும்) மையானது தங்குதற்கு விரும்புகின்ற.

22-22 மானவே - ஒப்பவே.

22-22 மெய்வேள் - உண்மையான ஆண்மகனாகிய.
23- 5 மாதுலனே - மாமனே.
23-11 அகிலமதில் - உலகத்தில்.
23-12 நல்மருகி - நல்ல மருமகள்.
23-14 சோர்வின்றி - மறப்பின்றி.
23-14 மெல் இயலாள்-மெல்லியதன்மையையுடையாளது.
23-15 மெய-சரீரம்.
23-15 அவள் மேவி - அவள் வந்து.
23-18 என் மா-எனது சிறந்த.
23-19 வந்தது தொட்டு-வந்தது முதல்.
23-20 தகவாயது - பெருமையடைந்தது.
23-22 நன்று-நன்மையே.
23-22 நங்கையினே - பெண்களுள் சிறந்தாளே.
23-23 ஆயிழையார் - ஆராய்ந்தெடுத்த ஆபரணங்களையுடையார் (பெண்கள்).
24- 1 தேன் நேர் மொழியாள்-நாவிற்கு இனிமைபயக்கும் தேன்போன்று செவிக்கு இனிமைபயக்கும் சொல்லையுடையாள்.
24- 1 திருமகிழ்நன் - அழகிய கணவன்.
24- 2 வான் ஆர் - தேவலோகம்வரை நிரம்பிய.
24- 3 கற்பணிபூண் - கற்பாகிய ஆபரணத்தை அணிகின்ற.
24- 5 இம்மின் தன்னை-இந்த மின்போன்றவளை.
24- 6 விழைவுடனே - விருப்புடனே.
24- 9 துணைவரையும்-சகோதரரையும்.
24-12 பன்னும்முனர் - சொல்லுதற்கு முன்னர்.
24-13 மாறுபடின் - மனஸ்தாபம் உற்றால்.
24-18 துன்னும் - நெருங்கிவாழும்.
24-20 பரிந்து - விருப்புற்று.
24-23 நீறு - விபூதியை.
25- 1 அன்பா - அன்பாக.
25- 3 புத்தமுதம்- புதியஅமிழ்தம்.
25- 7 அகம்போல் - மனம்போல.
25-12 நனுகிடினும் - கிட்டினும்.
25-13 புங்கமுடனே - உயர்ச்சியோடு.
25-15 சீரே - சிறந்த செயல்களே.
25-17 தாதை - தந்தையது.
25-18 தன் அநுசன் - தன் தம்பி.
25-22 உதித்தோமோ - பிறந்தோமோ.

25-24 இப்படியில் - இப்புவியில்.
26- 1 பயந்தாட்கு - பெற்றளுக்கு.
26- 5 பெண்மகவு - பெண் குழந்தை.
26- 5 பெற்றியை - தன்மையை.
26- 6 வண்மை - கொடைச் செயலை
26-12 ஒண்பாவை அன்னள் - ஒள்ளிய பாவையைப் போன்றவள்.
26-13 மங்கலம் - சுபம்.
26-13 வாகாக - அழகாக.
26-14 மாண்பாக - சிறப்பாக.
26-15 சால்பு உற - நிறைவு உற.
26-16 பால்நேர்-பாலை ஒத்த.
26-18 பான்மையொடும்- தகுதியோடும்.
26-20 மென்பாவை - மெல்லியபாவைபோன்றுள்
27- 2 மடவார்க்கும் - பெண்களுக்கும்.
27- 3 ஐம்பொன் என்றால் - இரும்பு,ஈயம், செம்பு, வெள்ளி, பொன் இவ்வைந்தையும் பொன் என்று கூறினல்.
27- 3 மற்றெவைக்கும்- பொன் தவிர மற்றைய நான்கிற்கும்.
27- 3 அவிர் ஒளிசேர் - பிரகாசிக்கும் ஒளியுள்ள.
27- 4 பண்பு-குணம்.
27- 5 உறுநட்பாம் - பொருந்திய தோழராகிய.
27- 5 தன் சித்தம் மகிழ்நட்பாம் - தனது மனம் உவந்த தோழியாகிய.
27- 6 தெரிவையர் - பெண்கள்.
27- 6 இத்தகையோர் - இவ்வியல்புள்ளோர்.
27- 8 வணம் - வண்ணம் - விதம்.
27- 9 மிக்கோர் மெய்நட்பே விரும்பி - பெரியோர் உண்மையான சிநேகத்தையே அவாவி.
27- 9 இனிதாகச் செய்நட்பே மிக்கோன்-இன்பமுறச்செய்கின்ற சிநேகத்தையே மிகுதியாகக் கொண்டோனாகிய.
27-10 மொய்நட்போர் - சேர்கின்ற சிநேகிதர்.
27-11 உள்அன்பாம் அமிழ்து உண்போர் - அக அன்பாகிய அமிழ்தைப் பெறுவோர்.
27-12 நிதம் நீங்கார் - எப்போதும் பிரியார்.
27-14 பாங்குடனே -அழகுடனே.
27-15 இன் அமுதம்-இனிய சாப்பாடு.
27-15 மாண்போடு - சிறப்போடு.

## அரும்பதவுரை.

27-16 நன்முகமன் - நல்ல உபசார மொழிகள்.
27-17 சித்திபுரிவார் - சித்தர்.
27-19 விருப்பு அறிந்து - அவரவர்க்கு விருப்பமானவற்றைத் தெரிந்து.
27-20 நலாள் - நல்லாள் — நற்குணமுடையவள்.
28- 4 சால - மிகுதியாக.
28- 7 நித்தமும் - ஒவ்வொரு நாளும்.
28-10 அதிவியப்பு உற்று - அதிக ஆச்சரியத்தை அடைந்து.
28-14 தம்மனைமார்க்கு - தமது மனைவிகளுக்கு.
28-14 சாற்றிடவே - சொல்லவே.
28-15 இத்தையலினை - இம்மாதை.
28-16 பாஙகே - சமீபத்தே.
28-17 பொய் வடிவேயாம் மருங்குல் - இல்லையென்றே கூறும்படியான இடையையுடைய.
28-17 பூவைமார் - (நாகணவாய்ப் புள்ளினது மொழியைப்போன்ற மொழியை யுடைய) பெண்கள்.
28-18 மெய்வடிவே ஆனள் - உண்மையே உருவெடுத்து வந்தாள்.
28-18 மைவடிவேல் கண்ணார் - கூரிய கூர்மையுடைய வேல் போன்ற கண்ணையுடைய பெண்கள்.
28-19 கனிவாய் - அன்புடையவளாய்.
28-20 பண் ஆர் - இசை நிறைந்த.
28-21 அந்நடையில் சின்னநடையாள் - அன்னத்தின் நடையிலும் மெதுவான நடையையுடையாள்.
28-22 செழுமதுரம் மன்னும் - மிக்க மதுரம் பொருந்திய.
28-24 நனி அருந்த - மிக உட்கொள்ள.
29- 2 நண்பு உரைகள் - நட்புக்குரிய சொற்களை.
29- 3 கல்வித்திறம் சேர்ந்தே - கல்வித் திறமையை யுற்றே.
29- 5 நல் அறத்தின் மாண்போடு - நல்ல தருமத்திற்குரிய சிறப்போடு.
29- 6 மாண்பே - மாட்சிகளையே.
29- 8 கொள்ளத் தெளித்து - கொள்ளுமாறு தெளிவாக்கி.
29- 9 சில் நேரம் - சில நேரம்.

# அரும்பதவுரை.

29-10 நல்நேரமா வசித்து - நல்ல காலமாகப் போக்கி.

29-10 பொன்நேர் நலம் சேர் வாளின் - இலக்குமி யைப்போன்ற அழகுடையாளின்.

29-14 செப்பம் உள - நடுவு நிலைமையுள்ள - நேர்மையுள்ள.

29-16 மருந்து எனவே-தேவாமிர்தம் எனவே.

29-20 கொட்பு இலா - ஒருபோதும் மாறாத.

29-22 மின்றுரும் - மின் போன்ற ஒளியையுடைய பெண்களும்.

29-22 சேல்விழியாள் - சேல் மீன்போன்றகண்ணை யுடையாளது.

29-23 நலத்தால் - நல்ல செயல்களால்.

29-23 சகோதரத்தின் பண்பெல்லாம் - சகோதரிகள் செய்கின்றசெயல்களெல்லாம்.

30- 1 இம் நங்கைமார் - இப்பெண்கள்.

30- 2 உம் நண்பை - உம்முடைய நட்பை.

30- 3 சில்நாளைக்கு-சிலநாள்களுக்கு.

30- 3 ஓர் தடவை - ஒருமுறை.

30- 3 சேய் இழையீர் - சிவந்த ஆபரணங்களையுடையவரே.

30- 4 பல்நாளும் - எக்காலமும்.

30- 5 தம்பதிகள்-தமது ஊர்கள்.

30- 6 சொல்ப-சொல்லுவர்.

30- 6 கொம்பு அனையார்-பூம் கொம்பைப்போன்ற பெண்கள்.

30- 7 பயில்வர்-செய்து பழகுவர்.

30-10 ஒள்ளியர் ஆவார்-அறிவுடையராவர்.

30-10 வெள்ளியதாம்- வெள்ளை நிறத்தையுடையதாகிய.

30-12 ஒண்மணிபோல் - சந்திரகாந்த மணியைப் போல.

30-13 சரியை-சரீர உறுப்புக்களால் செய்யும் திருத்தொண்டுகள்.

30-13 கிரியை - மனத்தாலும் சரீர உறுப்புக்களாலும் செய்யும் திருத்தொண்டுகள்.

30-13 யோகம் - மனத்தை ஆத்மாவில் ஐக்கியப்படுத்துதல். அஃதாவது நினைப்பின்றி அறிவு சொரூபமாக நிற்றல்.

30-13 ஞானம்-ஆத்மா பிரஹ்மம் என்று கேள்வியால் தெரிந்து அநுபவமாக உணர்தல்.

30-15 நமநல்லாள் - நாம் கூறும் சரித்திரத்தின் தலைவி.

30-16 நம் நல்லார் - நமது நாட்டுப் பெண்கள்.

30-17 பாசம் தனை அகற்றி- உலகப் பொருள்களிலுள்ள ஆசையை விட்டு.

30-18 எமது ஈசன் தனைப் பரவி-நாம் வணங்கும் சிவபெருமானைத் துதித்து.

30-18 மாசு அகன்ற - குற்றம் அற்ற.

30-19 உற்றால் - வந்தால்.

30-20 உன் அரும் மாண்புள்ளாள் - நினைத்தற்கரிய நற்குணமுடையாள்.

30-21 இறைஞ்சி - வணங்கி.

30-22 'அடிகள்' என்று கடவுளையும் குருவையும், முனிவனையும் கூறுவது தமிழ் மக்கள் வழக்கு.

30-23 அரும்பணிகள் - சிவபூசை முதலியவற்றிற்கு வேண்டுவன சித்தப்படுத்தல் முதலியன.

31- 4 தென் அளகை ஊர் உற்று உறைவர்-தென் அளகை ஊரில் வந்து தங்குவர்.

31-13 எழில் ஆர் - சிறப்புப் பொருந்திய.

31-14 செம்மையுள - நேர்மையுள்ள.

31-15 பேறு எல்லாம்-பெறத்தக்க நற்பயன் அனைத்தையும்.

31-16 எம் நன்மை உயர்ந்து- எமது அறங்கள் மேம்பட்டு.

31-17 ஆசிகள் - ஆசீர்வாதங்களை.

31-23 சீரியர்தம் நீர்மை எல்லாம் எய்தி - பெரியோருடைய தன்மைகளையெல்லாம் உற்று.

32- 1 மும்மலம் - மூக்குற்றம். அவை ஆணவம், மாயை, காமியம். ஆணவமாவது 'யான் பெரியவன்' என்னும் குணம். மாயையாவது காரண காரிய சம்பந்தத்தை அறியாத மயக்கம். காமியமாவது 'இந்து என்னுடையது' என்று அபிமானிக்கும் குணம்.

32- 1 அல்லை-இருளை.

32- 1 முனிந்து ஓட்டி-வெகுண்டு தொலைத்து.

32- 2 தேசை-ஒளியை.
32- 2 செம்மையொடு- நடுவு நிலைமையோடு.
32- 4 ஏற்று-கொண்டு.
32- 5 எற்கு உருகி - எனக்காக இரங்கி.
32- 6 சிச்குருவை - அறிவிற் சிறந்த ஆசானை.
32- 7 இருநிதி - பெரியசெல்வத்தை.
32- 9 என் தவப்பேறு - எனது தவப்பயனை.
32-10 நேமமொடு - முறைமையோடு.
32-10 நன்று உறவே - நன்மையைப் பெறவே.
32-15 பல்காலும் - பலமுறையும்.
32-16 பல்காலமும் - பல நாளும்.
32-19 சுருதிப்பொருள் உரைக்க - வேதப்பொருளைக் கூற.
32-20 மெல்லியலும்-மெல்லியதன்மையை யுடையாளும்.
33- 1 யாதும் வியவா - எதற்கும் வியப்படையாத.
33- 4 பாங்கு - பக்கம்.
33- 6 நன்மையதாய் - நன்மையையுடைய மார்க்கத்திற் சென்று - அறநெறியிற் சென்று.
33- 7 அன்பனொடு சேர்ந்து உரைக்கும் - கணவனோடு சேர்ந்து சொல்லுவள்.
33- 8 பூங்கொடி - மலர்க் கொடியைப் போன்றவள்.
33- 9 துதிசொலி - துதிச் சொற்களைச் சொல்லிக்கொண்டு.
33-10 அதிதி - பரதேசி.
33-13 மிக்கு ஏழையாயோங்களுக்கு - மிக ஏழையான எங்களுக்கு.
33-13 இடுவாய் - ஈவாய்.
33-16 ஆர்கடல்- ஒலிக்கின்ற சமுத்திரம்.
33-17 ஓங்கு - வளர்கின்ற.
33-17 சேய் உணங்கி - குழந்தை வாடி.
33-17 ஒண்குரல் - மிகுந்த சத்தம். காண்க அசை.
33-21 பொன்கமலம் தன்னில் - அழகிய தாமரை மலரினும்.
33-21 அதிபொற்பா - அதிக அழகாக.
33-21 முகம்மலர்ந்து - முகமானது மலர்ச்சியுற்று.
33-22 நல் கமலம் தனனில் - நல்ல தட்டில்.
33-22 அல்கமலம் அன்ன - சுருங்கிய தாமரை மலரைப்போன்ற.
33-23 அவர் தம் முகமும் - அவருடைய முகமும்.

# அரும்பதவுரை.

33-23 ஆங்கு இலங்க - அப்பொழுதே பிரகாசிக்க.

33-24 இன் அமுதம் - இனிய அன்னத்தை.

34- 1 அந்தி - இரவு.

34- 1 நீள்நேரம் - நீண்ட நேரம்.

34- 2 புந்தி - மனம்.

34- 3 அழன்று - கோபித்து.

34- 7 நனிசொரிவாள் - மிக இடுவாள்.

34- 8 சத்பாத்திரம் ஆனாள் - உத்தமியரானாள்.

34-14 கேசுக்காரர் - வழக்கினர். கேசு ஆங்கிலச் சொல்.

34-14 தேசு உற்று - அழகுற்று.

34-23 பெண் அரசி - இப்பெண் அரசியின்.

34-24 ஒண்குணம் - உயர்ந்த குணம்.

35- 3 அறப்பேற்றில் - தருமத்தின் பயன்களில்.

35- 5 மன்மதியாம் ஆனனத்து - நிலைபெற்ற சந்திரனாகிய முகத்தின் கண்.

35- 5 மான் இனத்தின் நாட்டமுளாள் - மான்குலத்தின் கண்களையுடையாள்.

35- 9 பொன்கலமா - அழகிய ஆபரணமாக.

35-10 நவில் தரமோ - சொல்லும் திறத்தனவோ.

35-10 முக்குணத்தில் - சாத்துவிகம், இராசதம், தாமதம் என்னும் மூன்று குணங்களில்.

35-11 தூய்தாம் - தூயதாகிய.

35-11 சொல்லும் - நாம் கூறும்.

35-16 ஒன்றேயும் - வேறு ஒன்றையும்.

35-17 கலைமகளே - வாணியே.

35-18 நிலமகளே - பூமி தேவியையே.

35-18 பொர்றையில் - பொறுமையில்.

35-18 நேர்வாள் - ஒப்பாள்.

35-19 திருவில் - அழகில்.

35-20 அரும்மனையே - அருமையான மனைவியாகிய அருந்ததியே.

35-21 சீரியதே - உயர்ந்ததையே.

35-21 உள் விழைவாள் - மனத்தில் விரும்புவாள்.

35-24 இன்கேள்வியே - நன்மை பயக்கும் நூற்பொருள்களையே.

36- 7 சொல் - சொல்லிய.

36- 7 வாய்மை மன்னும் - உண்மைபொருந்தும்.

36- 7 மாண்பு - குணம் - இலக்கணம்.

36- 8 ஒள்ளியதாம் - புகழ் பெற்றதாகிய.

36- 8 சீர்க்கேஉறும் - தன்மைக்கே பொருந்தும்.

36-13 எம் கம்பர் தாசர் - அன்றி-எமது கம்பரும் காளிதாசரும் அல்லாமல்.

36-14 நங்கை இசை - பெண்களிற்சிறந்த இவளது புகழானது.

36-15 படர்ந்த ஆழிசூழ் - விரிந்த கடல் சூழ்ந்த.

36-22 ஐயிரண்டதாகும் நூறோடு எழுபத்தாறு - ஆயிரத்து நூற்றெழுபத்தாறுவது.

37- 1 காவலனும் - அரசனாகிய.

37- 3 உழலும்- வருந்துவன்.

37- 4 தளர்ந்து - மெலிந்து.

37-14 தொல்நூல் நல்பொருள்கள் கற்றோன் - பழைய நூல்களின் நல்ல பொருள்களைக் கற்றோனாகிய.

37-17 மூந்நூல்களும் - அறநூல், பொருள்நூல், இன்பநூல் என்னும் மூன்று நூல்களும்.

37-19 அந்தம் இலாது-முடிவு இல்லாது.

37-21 நவையறவே - குற்றங்களெல்லாம் நீங்கவே.

37-23 மேலவரும் - பெரியாரும்.

37-24 சீலமதும் - ஒழுக்கமும்.

## நூற்புறம்.

38- 1 செந்தூரின்று- திருச்செந்தூரில் வாழ்ந்து.

38- 1 சீர் எலாம் திரட்டி - புகழ்களை யெல்லாம் சேர்த்து.

38- 3 மாண்பு எலாம் - நற்குணங்கள் எல்லாவற்றையும்.

38- 5 நன்மனை அறங்களை - நல்ல இல்லறங்களை.

38- 6 முன்மனையாக- முதல் மனைவியாக.

38- 6 மொய்ம்பொடு - சிறப்போடு.

38-11 உய்யார் - பிழையார்.

38-13 முன்னோர் - திருவள்ளுவரும ஔவையாரும்.

38-15 தொண்டுமே - பணியுமே.

38-18 நட்டனோர் - சிநேகித்தோர்.

38-20 செயிர் இலா - குற்றமற்ற.

39-21 வளன் உற - நன்றாக.

39-22 கொள்ளும்வித்தத்தில்- கேட்டோர் உட்கொள்ளுமாறு.

39-29 துரிசு அற - குற்றம் நீங்க.

39-30 பெட்பு உற-பெருமை அடைய.

39-31 பருகும்பொழுது-சாப்பிடும்போது.

39-32 பலரும் அறியாப்பதத்திலும்-குறிப்புமொழிகளாலும்.
39-32 மறைத்தும் - வெளிப்படையாகக்கூறியும்.
39-33 நவில்வன - பேசுவனவற்றை.
39-36 என் இலம்-என் வீட்டில்.
39-37 ஊனக்கண்ணினை ஒழித்து அவன் நின்றதால் - அவனுக்குக் கண்பார்வை இல்லாததால்.
39-38 ஊட்டினள் - சோறு ஊட்டினள்.
39-40 தலத்தினில் உள்ளோர் - ஊரில் உள்ளோர்.
39-42 உரம்-தைரியம்.
39-43 அடுக்களை - சமையல் செய்யும் அரங்கிற்கு.
39-44 யான் அறைந்திடும் முன்னர்-யான்சொல்லுதற்கு முன்.
39-47 உருவம்-சரீரம்.
40-48 மருவுதல் இலாமை-பொருந்தாமையை.
40-49 கற்பனையாக - இவர் பொய்யாகக் கற்பித்துக்கொண்டு.
40-50 சொல்பிழை - சொல் குற்றத்தை.
40-53 ஆதியில்-தேசிகன் நம் வீட்டிற்கு வந்தவுடனே.
40-54 ஒன்றிடாது - நாம் நெருங்காது.
40-54 அமர்த்தி - தா[illegible] வைத்து.
40-55 பிழை எணார் - குற்றமென்று கொள்ளார்.
40-56 பகுத்து - பாகுபாடு செய்து.
40-65 சீடன் அலை என - 'நீ எனது சீடன் அல்லை' என்று.
40-68 உறவினை - தொன்று தொட்டு வரும் நட்பினை.
40-68 ஒக்குமோ - பொருந்துமோ
40-69 உற்றான் - எனது சுற்றத்தான்.
40-69 கட்சியோடு - கட்சிக்காரனோடு.
40-70 உற்றான் - வந்தான்.
40-70 நல்கினன் - அக்கட்சிக்காரன் வழக்கை நடாத்த எனக்கு அதிகாரம் தந்தான்
40-71 உரிய கமிஷனை உதவுக - எனக்குண்டான கமிஷனைத் தருக. 'கமிஷன்' என்பது ஆங்கிலமொழி. வருவாயில்லாது வாடும் சில நியாயதுரந்தரர் தம்மிடம் கட்சிக்காரரை இட்டுவருபவனுக்கு அவரிடமிருந்து தமக்குக்கிடைக்

கும் பொருளில் நான்கில் அல்லது ஐந்தில் ஒருபாகத்தை அவனுக்குக் கொடுத்து வருகின்றனர். அப்பாகத்தைத்தான் 'உரியகமிஷன்' என்றது.

40-72 புரிவது அறியாது - அவன் சுற்றத்தான் ஆதலால் 'கமிஷன்' கொடுக்கும் வழக்கம் எனக்கு இல்லை என்று சொல்லத் தைரியமில்லாது.

40-72 பொள்ளென - விரைந்து.

41-74 செங்கைப்பொருளை - 'நமது கையில் உள்ள பொருளை.'

41-76 வடுக்கண்டு - குற்றத்தைப் பார்த்து.

41-77 அரும்பிழைகளை - நாவால் சொல்லக் கூடாத குற்றங்களை.

41-79 பொய்எனும் - அவை உண்மை யல்லவென்று நம்பும்.

41-81 செய்ய - சிறப்புற்ற

41-81 சீர்கள் - விவாகத்திற் கொடுக்கப்பட்ட மகளுக்குச்செய்ய வேண்டிய சிறப்புக்களை.

41-83 மாற்று உரை - பதில் உரை.

41-90 உணர்த்த - சமாதானப் படுத்திஞல.

41-90 உவந்து-ஊடலை விட்டுச் சந்தோஷித்து.

41-92 படை என - வாங்கித் தருக.

41-93 தொள்ளாயிரத்தொன்றில் - 1901-ம் வருஷத்தில்.

41-97 அவள் இனம் நீங்கி பாங்கு கொள்ளேன் என்று - 'அவளது சுற்றத்தை விட்டு வேறு குடும்பத்தில் இனிப் பெண் கொள்ளேன்' என்று.

41-99 இருமகார் - இரண்டு மக்களை

41-100 மேல் - இனிமேல்.

41-100 இனத்தொடு என் குணம் வரைவல் - எனது நன்பினரையும் குணங்களையும் சொல்வேன்.

---

## பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 33 | 17 | ஒண்குறல் | ஒண்குரல் |
| 38 | 8 | அழகை | அளகை |
| 41 | 20 | யிரத்தில் | யிரத்தொன்றில |
| 47 | 15 | 1902 | 1901 |

# அகமே புறம்.

## இதைப்பற்றிய சில புதிய மதிப்புரைகள்.

" இது ஜேம்ஸ் ஆலன் என்னும் தத்துவஞானியானவர் ஆங்கில பாஷையில் இயற்றியுள்ள 'அகத்திலிருந்து புறம்' என்னும் பொருள்படும் பெயரினையுடைய நூலின் மொழி பெயர்ப்பாகும். இப்புத்தகத்தில் ஆங்காங்கு தமிழ் நூலாசிரியரின் முதுமொழிகள் சமயோசிதமான விடங்களிற் சேர்க்கப்பட்டுள்ளன. அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய இந்நான்கு புருஷார்த்தங்களை அடைதற்கு இன்றியமையாச் சாதனமாயிருக்கும் அகத்தை ஒருவழிப்படுத்தி நடத்துவதே மகான்களின் இயல்பாதலால், இந்நூலை யியற்றிய பிள்ளையவர்கள், இதனைக் கற்பிப்போரும் கற்போரும் இத்தன்மையரா யிருக்கவேண்டுமென்பதை வெகு அழகாகப் பாயிரத்தில் குறிப்பிட்டிருக்கிறார்கள். இந்நூலைத் தமிழறிந்த ஒவ்வொரு ஆடவரும் பெண்டிரும், சிறுவரும் சிறுமியரும் கற்கவேண்டுமென்ற பேரவாவுடன் இதனாசிரியரவர்கள் தெள்ளிய தமிழில் இதை யெழுதி முடித்திருக்கிறார்கள். இது பெரிய எழுத்துக்களில் உயர்ந்த வெண்மைக் காகிதத்தில் அச்சிடப்பட்டிருக்கிறது."—இந்துநேசன், சென்னை.

" மனத்தினுடைய சக்தியும், அதனை நல்வழியிற் செல்லும்படி பழக்கும் முறையும், ஒழுக்கத்தின் விழுப்பமும், மெய்ஞ்ஞானம் அடைதற்கு மனம் பக்குவ மடைந்திருக்க வேண்டுவது அவசியம் என்னும் உண்மையும், தள்ளப்பட வேண்டிய தீயவொழுக்கங்கள் கொள்ளப்படவேண்டிய நல்லவொழுக்கங்கள் இவைகளின் விவரமும், பிறவும் இந்நூலில் சுருக்கமாகவும் விளக்கமாகவும் விவரிக்கப்படுகின்றன. மனத்தின் தன்மையையும் அகத்தே நிகழும் நிகழ்ச்சிகளையும் விரித்துரைப்பதற்கு நம் தமிழ் மொழியில் இறையனார் களவிய

ஒளவை, தொல்காப்பியம், 'நம்பியகப்பொருள் முதலாய சில நூல்கள் இருப்பினும், அவையெல்லாம் முதிர்ந்த ஆராய்ச்சியுடையவர்கட்கே பயன்படுவனவாம். மேனாட்டார் மனோ தத்துவ சாஸ்திரம் ஆன்ம தத்துவ சாஸ்திரம் முதலிய சாஸ்திரங்களை வரவர ஆராய்ச்சிசெய்து விளக்கி வருதல்போல நம் நாட்டார் செய்வதுமில்லை, ஆகவே, சாதாரண ஜனங்களும், சிறுவர் சிறுமியர்களும் அத்தகைய தத்துவ விஷயங்களில் ஸ்தூலமான அறிவுகூடப் பெறுதற்கு முடியாதவர்களாய் இருக்கிறார்கள். பிள்ளையவர்கள் அக்குறையினை இந் நூலால் ஒருவாறு நிவர்த்திசெய்திருக்கிறார்கள் என்று கூறுவது புகழ்மொழி யாகாது. இப்புத்தகம் நம் நாட்டுச் சிறுவர் சிறுமியர்களாலும் பெரியோர்களாலும் படிக்கப்பட வேண்டுவதான ஒரு சிறந்த புத்தகமாகும். இதில் சொல்லும் விஷயங்களை அநுஷ்டானத்திற்குக் கொண்டுவந்து நம் ஒழுக்கத்தை நாம் சீர்திருத்திக்கொள்ளவும் கடமைப்பட்டிருக்கிறோம்."—வைசியமித்திரன், தேவகோட்டை.

"இம்மொழிபெயர்ப்பு நூலை ஆக்கித்தந்த ஸ்ரீமாந் வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்கள் ரஸம் பொழியும் சொற்களால் மனத்தின் மகிமையை விவரித்துள்ளார். ஹிந்துக்களின் கொள்கைப்படி மனமே எல்லாவற்றுக்கும் காரணமென்பதை ஆங்கில விவேகிகளும் ஆமோதிக்கிறார்களென்பதை இப்புஸ்தகத்தால் அறியலாம். ஸ்ரீமாந் சிதம்பரம் பிள்ளையவர்கள் 'மனம்போல வாழ்வு' என்ற அருமையான தமிழ் நூலை ஏற்கனவே வெளியிட்டு நமது தமிழ் நாட்டாருக்கு உபகாரம் செய்திருக்கிறார். காகிதமும், முகப்பத்திரமும், எழுத்துக்களும் வெகு நேர்த்தியாயுள்ளன."—ஹிதகாரிணி, சென்னை.

"இப்புத்தகத்தில் அகமும் புறமும், மனத்தின் தன்மையும் வன்மையும், உயர்தர வாழ்வு—முதற்பாடம், உயர்தர வாழ்வு—இரண்டாம்பாடம், உயர்தரவாழ்வு—மூன்றாம்பாடம், மனோ நிலைமைகளும், அவற்றின் காரியங்களும் என்னும் அரிய விஷயங்கள் காணப்படுகின்றன. இது ஒவ்வொரு தமிழரும் பார்க்கவேண்டிய அவசியமான நூல். இப்புத்தகத்தை ஒவ்வொரு தமிழரும் கைக்கொண்டு இதைப்போன்ற

# அகமே புறம்.

பல நூல்களை ஷை நூலாசிரியரைக்கொண்டு வெளியிடச் செய்யவேண்டும்.''—கமலாஸனி, திருவாரூர்.

" இந்நூலின் நடையமைப்பு கடுகுக்குள் கடலையடைத்த விதமாய் ஒளிர்கின்றது. அருஞ்செய லருப்பு என்ற வாக்கியம் எத்துணைச் சுருக்கமாகவும் பொருட்சுவை நிரம்பியதாகவும் இருக்கின்றதோ அத்துணைச் சுருக்கமும் பொருட்சுவையுமுள்ள வாக்கியங்களால் எழுதப்பட்டிருக்கும் இந்நூலை ஆயிரமுறை திருப்பித் திருப்பிப் படிப்பினும், படித்துவிட்ட நூல் போன்று தோன்றாத ஒரு விசேஷம் இந்நூலின் முக்கிய அம்ஸமாகும். இந்நூலிலுள்ள விஷயங்களை எடுத்துக்கொண்டு அபிப்பிராயம் சொல்ல நமக்கு சக்தி போதாது. இதிலுள்ள விஷயங்கள் நித்திய பாராயணம் செய்யத்தக்க அத்துணை உயர்நல மமைந்தவை யென்றுமட்டும் சுருக்கமாய்க் கூறி முடிக்கிறோம்.''—பிரஜாநுகூலன், ஸ்ரீரங்கம்.

" இது ஜேம்ஸ் ஆலன் என்பவரியற்றியுள்ள நூல்களுள் ஒன்றன் மொழிபெயர்ப்பாகும். இது நல்ல நடையில் வேண்டுமிடங்களில் வேண்டிய செய்யுட்களை யுதாரணமாகக் காட்டி யெழுதப்பட்டிருக்கின்றது. இப்புத்தகம் பெரும்பான்மையும் மனத்தினியல்பினை நன்கு விளக்கிக் கூறிப் போதிக்குந் தன்மையதாக விருக்கின்றது. இஃதொவ்வொருவரும் வாசித்தற்குரியதாம்.''—லோகோபகாரி, சென்னை.

" இந்நூலாசிரியரது ஆங்கிலதிராவிட பண்டிதத்தன்மை இப்புத்தகத்தை வாங்கி வாசிப்போர்க்குத் தெற்றென விளங்கும். அன்றியும், அறிவை இது நன்கு விருத்திசெய்யும்.''—வித்தியாபாஸ்கரன், கிள்ளான்.

---